

நனமையுஞ செலவமும நாளும நலகுமே,
தினமையும பாவமும சிதைநது தேயுமே
ஜெனமமு மரணமு மினறிததீருமே, இமமையே
ராமவெனறிரணடெழுததினால

*இரண்டேயெழுததான ராமநாமததைச சொலவதனால இபபிறபபு தன னிலே எபபோதும எலலா நனமைகளும எலலாச செல்வஙகளும நிறைந திடும, ஸஞசிதம பராபதம எனகிற ஸகல பாபங்களும அழிநதொழியும; பிறபபதும இறபபதும ஆகிய ஸமஸாரமும தொலையும*

— காபபுச்செயயுள - கமபராமாயணம்

# ஸப்தகிரி

## ஏப்ரல் - 1990


தனிபபிரதி ரூ 1 மலர் 20

வருடச சநதா ரூ 12 இதழ 11


## உள்ளுறை



### அடடைபபட விளக்கம்

| | |
|---|---|
| முனனடடை | முகபபுச சிததிரம — கே ஜெகதீஷ |
| முதல் உள்அடடை | இநதியத்துணைககுடியரசுத் தலைவர் டாகடர் சஙகாதயாள சாமா மறறும் முனனாள் இலஙகைப பிரதமர் திருமதி ஸிரிமாவோ பண்டார நாயகே ஆகியோர் அணமையில் திருமலைககு வருகை புரிந்த போது |
| 2-வது உளஅடடை | தெபபோத்ஸவம் ஸ்ரீகோவிநதராஜசுவாமிகோவில திருபபதி |
| பினனடடை | ஸ்ரீகோவிந்தராஜசுவாமிகோவில-திருபபதி |


சிறபபாசிரியர்

திரு சிஎச் வெங்கடபதிராஜு IAS

செயலாடசித தலைவா, தி தி தேவஸதானம, திருபபதி

அச்சிடுபவர்

திரு எம் விஜயகுமார் ரெட்டி, மேலாளா, தி தி தேவஸதான அசசகம, திருபபதி

ஆசிரியர்

திரு கே சுபபாராவ், எம ஏ

துணையாசிரியர்

திரு என் எஸ் ராமமூர்த்தி, எம் ஏ.,

பிரதிகளுக்கு

EDITOR,
"Sapthagiri"
T T Devasthanams,
TIRUPATI


Sasi

# உங்களுடன் . . . .

இரண்டு வரி கவிதை என்றாலும், இருபதாயிரம் பாடல்கள் கொண்ட காவியமானாலும், அவை காலத்தை வென்று வாழ வேண்டுமென்றால் அவ்இலக்கியங்கள் சமுதாயத்தை மனதிற்கொண்டு, வளமான வாழ்க்கை நெறிக்கு அழைத்துச் செல்லும் அடிப்படை மனிதப் பண்புகளை நேரிடையாகவும், மறைமுகமாகவும் கோடிட்டும், அறிவுறுத்தியும் இருக்க வேண்டும் இதற்குச் சான்றாக பல நூற்றாண்டுகள் மறைந்தாலும் வள்ளுவனின் வாய்மொழியும், யுகம் பல கடந்தாலும் கம்பனின் இன்பக் காவியமும் இன்றும் புத்தம் புது இலக்கியங்களாக நம்மிடையே விளங்கி வருகின்றன குறள், வாழ்க்கை இலக்கணங்களை வகுத்துள்ளது என்றால், அவ் இலக்கணங்களுக்கு ஒரு வடிவம் தந்திட்ட வகையில் ஓர் வாழ்க்கை இலக்கியமாக காகுத்தனின் கதை திகழ்கின்றது

சமயமே ஒரு சிலருடைய சாதகமான சாதனம்தான் என்று ஒரு சில அரசியல் புலம்பல்வாதிகளின் பிதற்றலை மனதிற்கொண்டே, இச்சமய இலக்கியங்களை ஒரு சமுதாய மேம்பாட்டு நோக்கில் சீர்தூக்கிப் பார்க்கின், கதையும், மாந்தர்களும் கற்பனையே என்று எடுத்துக் கொண்டாலும், அவ்இலக்கியங்களில் நடைபெறும் நிகழ்ச்சிகள்-காட்சிகள் மூலம் பெறப்படும் உண்மைகளை நாம் அறிந்து தெளியவில்லையானால், குறை, நமது பகுத்தறிவில் மட்டுமேயன்றி, நமது சமயச் சான்றோர்களிடத்தோ, அவர்களதம் படைப்பிலக்கியங்களிலோ அல்ல கடலின் ஆழம் கரையில் குளிப்பவர்களுக்குத் தெரிய வாய்ப்பில்லை மூழ்கி முத்தெடுக்கும் வல்லோனுக்கு மட்டுமே கடலின் ஆழம், அதன் செல்வச் செழிப்பும் தெரியவரும் இந்தக் கண்ணோட்டத்தில் மேலோட்டமாக நாம், உலகம் உய்ய பல அவதாரங்கள் புரிந்திட்ட மாயவனின் ஒரு அவதாரமான, மனிதப் பிறவியின் மாட்சிமையினைப் படம் பிடித்துக் காட்டிடும் வகையில் திகழ்ந்திடும் இராம காதையினைச் சற்றே நோக்கிடுவோம்

வாழ்க்கையில் ஒருவன் முன்னேற வேண்டுமென்றால் தடைகளை அவன் கடந்தே ஆக வேண்டும் அத்தடைகள் தாம் அவனைப் பக்குவப்படுத்துகின்றன குறையில்லாத மனிதன் இல்லை குறைகள்தாம் நிறைகளை இனங்காட்டுகின்றன ஆக தடைகளும், குறைகளும் வாழ்க்கையின் ஓர் அங்கமேயாகும் இந்நியதி இராமன் காலத்தும்-திரேதாயுகத்தும் விளங்கி வந்துள்ளது இக்குறைகளை, தடைகளை இன்றைய மனிதன் எவ்வாறெல்லாம் எதிர்கொண்டான், அதனால் அவன் பெற்ற பயன், எதிர்வரும் யுக மனிதர்களுக்கு அக்கவிஞன் தெரிவிக்க நினைத்த செய்திகள் யாவுமே, காவியத்தை நுணுகிப் பார்க்கின் தெள்ளிதின் அறியவரும்

வேறு வேறு தாய்மார்களுக்குப் பிறந்தாலும் தசரத புத்திரர் நால்வருள்ளும் நிலவிய உறவின் உறுதி மகத்தானது சுமித்திரைக்குப் பிறந்த இலக்குவன் இராமனை தெய்வமாகவும் இலக்குவனின் உடன் பிறந்தானாகிய சத்ருக்கினன் பரதனை தெய்வமாகவும், அப்பரதனோ இராமனை தெய்வமாகவும் எண்ணிப் போற்றுகின்றார்கள் அவர்களிடையே விளங்கி வந்த பாசவலையின் சிறப்பினை, உறுதியினை, ஒவ்வொரு குடும்பத்தும் ஒரு வயிற்றுச் சகோதரர்கள் ஒரு கணம் நினைத்துப்பார்த்தாலே போதும், அதுவே எதிர் காலத்தில் அக்குடும்பத்தில் ஒரு நல்ல தலைமுறையினரை உருவாக்கும் உடன் பிறந்தோரை நேசிக்கக் கற்றுக் கொண்டால், அந்த நேச உணர்வே இன, இட, மொழி, உருவம் கடந்து பலரை அன்பு அரவணைப்பில் பிணைத்துவிடும் என்பதற்கு குலம் தாழ்ந்த குகனையும், அழகு அற்ற அனுமனையும், அரக்கக் குலத்தில் பிறந்திட்ட வீடணனையும், உயர் குலத்தில் பிறந்திட்ட இராமன் தன் சகோதரர்களாக ஏற்றுக் கொண்ட நிகழ்ச்சிகள் சான்று பகரும் இதனை ஒரு சில வினாடிகள் நாம் எண்ணிப் பார்த்திடின் இன்று நம மண்ணில் சமயக் காழ்ப்புணர்ச்சிகளும் சமூக ஏற்றத் தாழ்வுகளும், இனப் பிரச்சனைகளும்தான் தலைவிரித்தாடிடுமா? இராமனிடம் கைகேயி வைத்த அன்பு, கௌசல்யைவிட அதிகம்தான் இருந்தும் அவ் இராமனையே காட்டுக்கு அனுப்பும் வகையில் கைகேயியின் மனம் திரிந்தது மந்தரையினால்தான் இத்தகு மந்தரைப் பண்புகள் கொண்ட மாந்தர்கள் நம மிடையே எத்தனைப் பேர் உள்ளனர் இவர்களதம் அறிவுரைகளை (!) நாம் நம வாழ்க்கையில் உணர்ச்சி கொண்டு ஏற்காமல், அறிவு கொண்டு சீர்தூக்கிப் பார்ப்பது எத்துணைப் பயன் தரும் என்பது நாம் பெறும் பாடமாகும் பெரியோர்களுக்கு-சான்றோர்களுக்கு மதிப்புத் தருவது என்பது இளைஞர்களிடையே ஓர் அரிதான பண்பாக விளங்கிவரும் இன்றையச் சூழ்நிலையில், தசரதன் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு கானகம் ஏகிய இராமனும், தசரதன்மீது கடுங்கோபம் கொண்டு, இழி சொற்களையும் வாரி இறைத்துப் பிறகு இராமன் அறிவுரையினால் தணிந்த இலக்குவனும், பெற்றவளையே தூற்றிப் பின்னர் பெரியோர் உபதேசத்தால் தன்னிலை அடைந்த பரதனும் இன்றைய இந்தியக் கூட்டுக் குடும்பத்திற்குத் தேவையான வழிகாட்டிகளாவர்

(அடுத்தப் பக்கம் பார்க்க)

# செய்திச் சுருக்கம்

பெங்களூரைச சோநத தொழிலதி 'பர் டாகடர் தாசபபா அவர்கள தி தி தேவஸதான நிதய அனனதான திடடத்திறகென ரூ 10/- இலடசத தினை நனகொடையாக அளித்துள் ளார்.

ஃ

திருபபதியிலுள்ள தி தி தேவஸ தானததாரின ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கலைக் கல்லூரியின விடுதி கடடிடத்தினை ஆநதிர மாநில பஞ சாயத்ராஜ துறை அமைசசா திரு ஆர் செங்கா ரெடடி அவர்கள 10-3-90 அனறு திறநது வைததாா இநநிகழசசி ஒடடி ஏறபாடு செயயப படட விழாவிறகு ஆந்திர மாநில அறநிலையத துறை அமைசசா திரு மாகண்டடி நவிநதிரநாத் சௌதரி அவர்கள தலைமை வகித்தாா கல் லூரி முதல்வர் திரு பாப்பாராவ அவர்கள கூடடத்தினரை வரவேறக, கல்லூரி விரிவுரையாளர் திரு காமி செடடி ஸ்ரீ நிவாசலு செடடி அவா கள நனறி நவினறார். 11 ஏக்கா நிலபபரபபில் சுமாா ரூ 60 இலட சம செலவில இவவிடுதிக கடடிடம கடடபபடடுளளது

ஃ ஃ ஃ

திருபபதி அருகே நரசிங்கா புரதநி லுளள தி தி தே ஆயுர்வேத மருத துவ மனைககான மருநதகம ஒன றினை ஆநதிர மாநில அறநிலையத் துறை அமைசசர் திரு எம. நவிநதிர நாத சௌதரி அவாகள 10-3-89 அனறு திறநது வைததாா

ஃ ஃ ஃ

வான மாமலை வைஷ்ணவ பீடாதி பதி ஸ்ரீ பெரியபபன இராமானுஜ ஜீயா அவாகள 14-3-90 அனறு திருபபதிக்கு வருகை புரிநதாா திருபபதி ஸ்ரீ கோவிநதராஜ சுவாமி கோயில, திருசசானூர் ஸ்ரீ பத்மா வதித் தாயார் திருககோயில மறறும திருமலைக கோயிலுககும எழுந தருளி, பினனா அஹோபிலததிறகு புறபபடடுச சென்றார்.

ஃ ஃ ஃ

திருமலைக கோயிலின தெபபோத ஸவம 7-3-90 முதல 5 நாடகளுக்கு வெகு விமாசையாகக் கொணடாடப படடது

ஃ ஃ ஃ

உடுபபி மடாதிபதி ஸ்ரீ விதயா மானயா தீாதத சுவாமிஜி அவர்கள அணமையில திருமலைக்கு வருகை புரிநது ஏழுமலையானத தரிசிததாா அதறகு முனனா சுவாமிஜி உதஸ வரின சேஷ வஸதரததால அணி விககபபடடு திருமலைக கோயில் பெயிஷ்காா திரு பால ராம சந திரயயா அவாகளால் வரவேறகப படடாா

ஃ ஃ

ஆநதிர மாநில சடட மனற சபா நாயகா திரு பி ராமசந்திரா ரெடடி அவாகள, அணமையில பிரிடடனில் இநதிய ஹைகமிஷனராக புதியதாகப பதவி ஏறற திரு குலதிப நயயார் அவாகள, ஆநதிர மாநில மககள நீதி மனறததின நீதிபதி திரு சீதாராம ரெடடி அவாகள ஆகியோர் சென்ற மாதத்தின பலவேறு நாடகளின போது திருமலைககு வருகை புரிநது இறைவனைத் தரிசித்தனர் ★

---

(முன பக்கத் தொடர்ச்சி)

வாலியின் தந்தை அரசு புரிந்த போதும, பினனா வாலியிடததும, சுகரீவனிடத்தும நமபிக்கைக்குரிய அமைச்சனாகவே பணி புரிநதிடட அனுமனது திருததொணடும், தன தலைவர்களமீது ஒரு போதும ஒரு சிறு சொல்லும கூறாத அனுமனது பண்பும, பணிவும அனறைய அரசியல நாகரிகத்தினையும, இனறைய அரசியல வீழ்சசியினையும கோடிடடுக் காடடுவனவாக அமைகினறன

தவறு செய்வது தலைவன எனறாலும, அதனைச சுடடிககாடடி, அதே சமயதது கடமைக்காகத் தங்களையே தியாகம் செயத கும்பகாணனும இந்திரஜிததும, மாரீசனும தலைவன-தொண்டன உறவுக்கு முனனுதாரணங்களா வர் சூர்பபணகையின் முலைககாமபுகள அறுபடடதும அதனால, மாறறான ஒருவன சீதையை சிறையெடுத்ததும ஆகிய நிகழ்ச்சிகள் மனிதன எந்த நிலையிலும மனித நாகரிகததை மீறுதல கூடாது எனபதையும, அதனால விளை வது கேடே எனபதையும சுடடிக காடடுகிறன மாடமாளிகைகளும, நாளும விருநதும, கேளிககைகளும, நிறைந்து பொன்னும மணியும புரணடோடிய இலங்கை மாநகரம இறுதியில அழிந்து படடதறகுக் காரணம மாறறான மனைவியை பெண்டாளும நினைபபும, கறபுககரசியின ஒரு சொடடுக் கணணீருமதான எனபதை நிலை தடுமாறும பலரும அறிய வேண்டிய ஒனறாகும

இத்தகு நறசெயதிகள பலவறறைத் தநதிடும ஒரு காவியமாக இராமனின சரிததிரம விளங்குவதாலதான, நாம் அவன் வாழநது காடடிய 'இராம ராஜயததை' நமமிடையே காண ஆவலாக உளளோம தனிமனிதனுக்கு மகிழச்சி யினையும, நமபிக்கையினையும தந்து, வேறுபாடுகளிலிருநதும, மன உளைசசலகளிலிருநதும அவனைப பாதுகாபபது அவன் வாழும சமுதாயமாகும், சமுதாயம ஆரோக்யமாக விளங்கினாலதான தனிமனிதனுககுப பாதுகாபபு கிடைக்கும. சமுதாயம குறைபாடுகளுடனும, பலவீனமாகவும விளங்கினால அதில வாழும மனிதன நமபிக்கை இழந்து, அறிவு தடுமாறி அச்சமுதாயததின அடிபபடை அமைதியினையே அழிக்கப புறபபடுகின்றான ஆகவே சமுதாயம முனனேற வேண்டுமானால மனித நெறிகள மறக்கபபடாதிருக்க வேண்டும அன்றுதான 'இராம ராஜயத்தை' நாம நம கண்ணால் காண முடியும, நம சந்ததியினர் அனுபவித்திட முடியும

# கம்பர் கண்ட ஆழ்வார்கள்

திரு. கே. வரததேசிகன்,
விழுப்புரம்

ஸ்ரீமந நாராயணன தசரத ராம னாக அவதரிதத பொழுது நானமறையும இராமாயணமாக அவதரிததது எனறு பெரியோா பணிபபா வான மீகி அருளிய ஆதிகாவியமான இராமாயணம வடசொறகளாகிய வேதத தின ஸாரம அதுபோலவே மதி நலம அருளபபெறற ஆழவார்கள அருளிய தமிழவேதமாம திவவியப பிரபநதஙகளின சாயலே கமபராமா யணம ஆழவாாகளின ஈரசசொற களையும கருத்துக கருவூலஙகளையும கமபா வண்ணமுற எடுததாணடு தம காவியததிறகு வனபபூட்டியுளளாா அவரது காவியககாவினிலே ஆழவாா கள திருவாயமலாநதருளிய வமபவிழ வாசகஙகளாம் வாடாமலாகள பூத் துப புதுமணம் வீசுகினறன. அநதக காவினில நாமும புகுநது அழகிய மலாகளின நறுமணத்தை நுகரு வோம

கலியனூரை குடிகொணட கருத துடையவா நமதேசிகா என்றுல ஆழ வாாகள அனைவரின கருததுககளும குடிகொணட நெஞ்சினா கமபா ஆழவாாகளின பிரபநதஙகளில கம பா காதலாதரத்துடன ஈடுபட்டு ஆழஙகாறபடுத திளைததுளளாா ஆதலின அவரைக 'கமபநாடடாழ வாா' எனறு அழைபபது சாலப பொருநதும

அரஙகத்தரவணையில பளளி கொளளும கோவினைக கூடலூா கோன குலசேகரன தம நடைவிளஙகு தமிழ மாலையில 'ஈநதமிழ இன பபா' எனறும 'அவவடமொழி' எனறும நாவுற வழுததுகிறாா திரு மஙகையாழவாரும திருநெடுநதாண் டகததில எமபெருமானை, 'செந நிறதத தமிழோசை வடசொலலாகி' எனறு பரவுகிறாா. இவர்கள அடி யொறறிக கமபா இராமனை 'தென சொறகடநதான' 'வடசொற கலைககு எலலை சோநதான' எனறு மெருகிடடுக காடடுகிறாா

எமபெருமானின கடலவிளஙகு கருமேனியையும முடிசசோதியையும அடிசசோதியையும ஒருசேரச சுருங கச சொலலி விளஙக வைகக நமமாழ வாா தமககே உரிய பாணியில மால வனைக 'கருநாயிறு' (திருவாய மொழி 8-5-7) எனறு கூறிக கணணனின காாவணணததையும கதிரவனின ஒளியையும காணபிக கிறாா அநத முரணதொடைச சொலலைக கொணடே இராமனின அழியா அழகினைக கமபா கடிமணப படலததில காட்டிக கொடுபபதை அவா நெஞ்சுகொண்டு நோககுவீா

கருஞாயிறு போலபவர் காலொடு
போய
வருநாள அயலே வருவாய மனனே
பெருநாள் உடனே பிரியாது உழலவால்
ஒருநாள தரியாது ஒழிவாா உளரோ
—பாலகாணடம

மககள சோகததின உசசநிலையில தான 'ஐயோ' எனற அவலச சொலலை வாயவெருவுவா சிததா கைபபடட இருமபும பொனனாவது போல அநத அவலச சொல இருவா கைகளில மஙகலச சொலலாகி மணம கமழகிறது அரஙகனது செயய வாயும நீலமேனியும திருபபாணாழ வாரின சிநதையையும நெஞ்சையும கவாநது நிறை கொண்டன அவரது பாடடினுல நாமும அநத எழிலைக கணடு வாழவோம

கையினார்சுரி சஙகனலாழியர்
நீள வரைபோல
மெயயனார் துளப விரையார்
கமழநீளமுடியெம
கையனார் அணியரஙகனாரரவி
னணை மிசை மேய மாயனார்
செயயவாயையோ! எனனைச
சிந்தை கவாந்ததுவே

ஆலமா மரததினிலைமேலொரு
பாலகனாய்
ஞாலமேழுமுணடானரஙகத
தரவினணையான
கோலமாமணியாரமும முத்துத
தாமமும முடிவிலலதோரெழில்
நீல மேனியையோ! நிறைகொணட
தென நெஞ்சினையே!

பாணபெருமாளின பாணியிலேயே கமபரும பேசுகிறாா, இராமனின வடிவழகை

மையோ மரகதமோ மறிகடலோ
மழைமுகிலோ
ஐயோ! இவன வடிவு எனபதோர்
அழியா அழகுடையான
—கஙகைபபடலம,
அயோதயா காண்டம

'குழலழகா, வாயழகா, கணணழகா, கொபபூழில எழுகமலப பூவழகர்' எனறு அழகின அடுககுச சிகரங களாம சாவாஙக சுநதரனின பேரழ கின நீர்வீழசசியில இழிநதவா. சோராத காதல பெருஞ்சுழிப பின னிடைபபடடு, நிலைதடுமாறி, கை சோர, காலசோர, மெயசோர, மணத தூணே பறறி நினறு, தொலலையின பததினிறுதி காணபாா. தாளாண்மை காரணமாக 'ஐயோ' எனனாமல் வேறு மொழிவரோ? அநத அழியா அழகினை மறவாதாா மறவாதாரே! 'ஐயோ' எனறது ஆசசாயததை யாதல அனுபவிதது ஆறறவரிதானபடி யையாதல அனுபவரஸத்தையாதல காடடுகிறது" எனபது ஸ்ரீவேதாநத தேசிகரின 'முனிவாஹன போகம'

எனகிற வியாகயான ரஸானுபவம். அது இவண கருதறபாலது

பரகால நாயகியின பேசசையும பராஙகுச நாயகியின பேசசையும பேசவிழைகிறது கமபரின உளளம அநதப பேரவா சீதையின வாயிலாக மிதிலைககாடசிப படலததிலும கடி மணபபடலததிலும நிறைவு பெறு கிறது

விசுவாமிததிரருடனும இலககுவ னுடனும இராமன மிதிலை நகா புககுக கனனிமாடம கடநது போகுங கால நமபியும நஙகையும ஒருவரை யொருவா நோககு அனனதொரு நோககினிலே ஆவி கலநதனா ஓவி யப பாவை போல நினற இடம பெய ராமல சீதை தன சிநதையையும நிறையையும மெயநநலனையும இராமன பின செலல விடுகிறாள இஙகே கமபரின பாடலை ரசிபபதறகு முன கலிகனறியின பாசுரததைப படித்து இனபுறுவோம

“ மினனிலஙகு திருவுருவும பெரிய
தோளும
கரிமுறிந்த கைததலமும கணணும
வாயும
தனனலாநத நறுஙதுழாய மலரின
கீழே
தாழநதிலஙகு மகரஞ்சோ இழையும
காட்டி
எனனலனும எனனிறையும
என சிநதையும
எனவளையும கொணடெனனை
யாளும கொணடு
பொனனலாநத நறுஞ் செருநதிப
பொழிலினூடே
புனலரஙக மூரெனறு போயினாரே ”

இநதத திருநெடுநதாணடகப பாசு ரததில அரஙகனின செலவைக கூறு கிறாா அருளமாரி சீதையின நெஞ சததைக கொளளை கொணடு மேல நடநத இராமனின செலவும அவன தேயாம கமபா பாடுகிறாா

அந்தமில நோககு இமை அணைகி
லாமையால
பைஙதொடி ஓவியப பாவை
போனறனள
சிநதையும நிறையும மெய்நநலனும
பினசெல
மைநதனும முனியொடு மறையப
போயினான

அடுதது கடிமணப படலததில பராங குச நாயகியின இடததில சீதையை வைததுப பேச வைககிறாா கமபா அலல, அலல சீதையின இடததில பராஙகுச நாயகியைப பேசவைக கிறாா கமபருககு நமமாழவாரிடத தில பேரனபு, ‘சடகோபரநதாதி’ பாடியவா அலலவா? பணிவுடைய பரிமேலழகரால பெரியாா எனறு பெருமை தோனறக குறிபபிடப படும பாலேய தமிழா பராஙகுசனை ஏததாத செநநாப புலவா உணடோ?

புரை துடைததுப பெரும பொயயும்
துடைததுப பிறா புகலும
உரை துடைதது அஙகுளள
ஊசல துடைதது எம உறு பிறவித
துரை துடைதது ஆடகொணட
தொணடாபிரான துறைநீாப
பொருநைக
கரை துடைககும கடலே துடையேல
அனபா காறசுவடே
—சடகோபரநதாதி

அநத ஞானததமிழக கடல நாயகி பாவததிலே கடலை நோககிக கூறு கிறது

காமுறற கையறவோ டெலலே
இராபபகல
நீமுறறக கணடுயிலாய நெஞ்சுருகி
ஏஙகுதியால
தீமுறறத தெனனிலஙகை யூடடினுன
தான நயநது
யாமுறற துறறாயோ? வாழி
கனை கடலே!

‘இரவு பகலாக ஓலமிடும கடலே! உனககு உறககமிலலை போலும என னைப போல நீயும தெனனிலஙகை சென்ற கோமான பின நெஞசைப போகவிடடு ஏஙகுகினறனையோ’ எனறு பராஙகுச நாயகி கேடபதும அநதக கடலை நோககிச சீதை கேட பதும ஒரே அனுபவமதான

இடையே வளைசோர எழுநது விழுநது
உடல ஓயவு உற நானும
உறஙகலையால
கடலே! உரை நீயும ஓர
கனனிகொலாம!

சக்கரவாததி திருமகன ஏழைவேட னான குகனிடம தோழமை பாராட டிச சொனன வாாததைகள இராம னின எளிமையை-ஸௌலபயததைப பறைசாறறுகினறன அநத வாாத தைகளை மஙகை மனனனும கமப ரும ஒருபடியாக நினைவூடடுகினற னா

‘ ஏழை ஏதலன கீழமகன எனனா
திரஙகி மறறவள கினனருள சுரநது
மாழை மானமட நோககியுன தோழி
உமபி எமபி என றொழிநதிலை,
உகநது
தோழனீயெனக கிஙகொழி எனற
சொறகள வநதடியேன
மனந்திருநதிட
ஆழிவணணா ! நின அடியினை
யடைநதேன
ஆணி பொழில திருவரஙகத
தமமானே

இநதப பெரிய திருமொழிப பாசு ரததை அடியொறறியே கமபரும சீதை வாயிலாகக காடசிப படலத தில இநத வாாததைகளைத தெரிவிக கிறாா

ஆழநீாக கஙகை அமபி கடாவிய
ஏழை வேடனுக்கு எமபி நின தமபி,நீ
தோழன மஙகை கொழுநதி
எனசசொனன
வாழி நணபினை உனனி
மயஙகுவாள

பரகால நாயகியின நெஞசமும சீதையின நெஞசமும ஒரு மிடறறாக உளளன அவாகளின சிநதனையும பததுடையடியவாக கெளியனான இராமனின ஸௌலபய குணததைப பறறியதே

கறபனைத திறனிலும கமபா திரு மஙகையாழவாரின திருவடி நிழலி

லேயே ஒதுஙகுகிறாா காாகாலம மேகஙகளின இடி முழககம மலை களைப போனற பெருமபாமபுகள இநத முழககததை யானைகளின முழககமென மயஙகி இடம பெயரு கினறன இநதக காடசியினைக கலியன திருமொழியிலே காணலாம

கரிய மாமுகில படலஙகள கிடநதவை
முழஙகிடக களிறெனறு
பெரிய மாசுணம வரையெனப
பெயாதரு
பிருதியெம பெருமானை
பெரிய திருமொழி 1, 2, 10

இதே காடசியைக கமபா சிறிது மாறறிக கூறுகிறாா

இடிகொள வேழததை எயிறறொடும
எடுதது உடன விழுஙகும
கடிய மாசுணம கறறு அறிந்தவா
என அடஙகிச
சடைகொள செனனியா, தாழவிலா
தாம மிததேறப
படிகளாம எனத தாழவரை கிடபபன
பாராய
—சிததிரகூடபபடலம
அயோததியா காணடம

பரிமளரஙகா பேரில பரகாலன பாரிததுரைதத பாடலையும கமபன அதைத தழுவி அதே வணணததில பாடிய பாடலையும ஒபபு நோககி னால ஓசை இனபம பயககும முன னா திருமஙகையாழவாரின பாட லைப பாா்பபோம

'முனனை வணணம பாலின
வணணம முழுதும நிலைநினற
பினனை வணணம கொணடல
வணணம வணணம எணணுஙகால
பொனனின வணணம மணியின
வணணம புரையும திருமேனி
இனன வணணம எனறு காடடீா
இநதளூரீரே'
—(பெரியதிருமொழி 4 9'8)

இதை அடியொறறிய கமபன பாடல பினவருமாறு

இவவணணம நிகழநத வணணம
இனி இநத உலகுககெலலாம
உயவணணம அனறி மறறோா
துயா வண்ணம உறுவதுணடோ
மைவணணததது அரககி போரில மழை
வணணதது அணணலே' உன
கைவணணம அஙகுககண்டேன
கால வணணம இஙகுககணடேன
(பாலகாணடம அகலி —பா 82)

இதே போல கமபா ஆணடாளமமை யின பாடலைத தழுவி ஓசை நயததை எடுததாணடிருபபதை அடுதது க காணலாம -

'காாககோடற பூககாள' காாககடல
வணணன எனமேல உமமைப
போாககோலம செயது போர
விடுததவன எஙகுறறான
ஆாககோ இனி நாம பூகலிடுவது
அணி துழாயத
தாாககோடும நெஞ்சநதனனைப
படைகக வலலேன அநதோ!'
(நாசசியாா திருமொழி 10.1)

நீாககோல வாழவை நச்சி நெடிது
நாள வளாததுப பினனைப
போாக்கோலம செயது விடடாறகு
உயிாகொடாது அஙகுபபோகேன
தாாககோல மேனி மைநத' எனதுயா்
தது்ாததியாயின
காாககோல மேனியானைக கூடுதி
கபுதின ஏகி
(யுதத காணடம—கும்பகாணன
வதைபபடலம 150)

கிடகிநதா காண்டம காாகாலப பட லததில காணபபடும இரணடாவது பாடலும பொயகையாழவாா அரு ளிச செயத முதல திருவநதாதியின முதறபாடலும கறபனையில ஒனறு போல அமைநதிருபபது அறிவிறகு விருநதாகும அவைகளையும ஒன றன பின ஒனறாக அனுபவிபபோம.

'பை அணைப பலதலைப பாநதல
ஏநதிய

## சந்தாதாரர்களுக்கு...

31-5-90—ஆம தேதியுடன முடிவடையும ஸபதகிரி சநதாதாரா களின எணகள கீழே கொடுககபபடடுளளன சநதாவைப புதுபபித துககொளளுமபோது, தஙகள சநதா எணகளைக கணடிபபாகக குறிப பிடவும புகாாகளுககும,விவரஙகளுககும 'ஆசிரியா'ஸபதகிரி, தி தி தே திருபபதி எனும முகவரியுடன ஆஙகிலததில தொடாபு கொளளவும

69 70 100 114 122 188 191 194 247 309 310 316 320 322 323 325 327 329 340 449 511 527 595 657 660 662 668 674 677 680 685 686 687 691 988 1207 1550 1554 1561 1600 2276 2803 2974 2975 2989 2993 2994 2998 2999 3001 3006 3008 3010 3012 3018 3020 3027 3035 3038 3047 3866 4224 4225 4227 4229 4232 4234 4237 4241 4243 முதல 4245 4247 4248 4250 முதல 4252 4261 4263 4265 4267 4270 4272 4276 4278 4280 4283 4284 4287 4288 4292 4293 4297 4298 4302 4305 4306 4309 4312 முதல 4315 4321 4325 4332 4333 4335 4337 முதல 4340 4342 4347 4350 4353 முதல 4355 5485 முதல 5490 5493 முதல 5509 5511 5514 முதல 5522 5524 முதல 5551 5553 5556 முதல 5563 5565 முதல 5567 5581 5582 5587 5593 முதல 5610 5612 5614 முதல 5616 5618 முதல 5629 5631 முதல 5651 5654 முதல 5658 5664 முதல 5669 5671 5672 முதல 5674 5676 5678 முதல 5681 5707 5809

மொய்நிலத் தகளியில் முழங்கு நீர்
நெயின்
வெய்யவன் விளக்கமா மேரும்
பொன்கிரி
மை எடுத்து ஒத்தது — மழைத்த
வானமே '

இது கம்பன் பாடல்.

வையம் தகளியா வார்கடலே
நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக-செய்ய
சுடராழியான் அடிக்கே சூட்டினேன்
சொன்மாலை
இடராழி நீங்குகவே என்று '

இது பொய்கையாழ்வாரின் பாடல்.

முதல் பாடலின் பின் மூன்று அடிகளும் இரண்டாவது பாடலில் முன் இரண்டு அடிகளும் ஒத்திருப்பது காணலாம்.

'வந்தாய் போலே வாராயே' என்றும், 'வந்தாய் போலே வாராதாய் போல் வருவானே' என்றும் நம்மாழ்வார் திருவேங்கடமுடையானை பரவுகிறர். அதனை ஒட்டிக் கம்பரும் 'வாராதே வரவல்லாய்' என்று பாடியுள்ளார். ஆண்டாள் திருப்பாவையில் 'மத்தினுல் ஓசை படுத்த தயிரவம்' என்று கூறி உணர்த்தும் ஆயர் பாடி நிகழ்ச்சியைக்கம்பர், மத்தொலி துள்ளல் போல் மாயவெள்வளை வாய்விட்டு அரற்றலும்' என்று சித்திரிக்கிறார். ஆண்டாள் 'வாரண மாயிரம்' என்று தொடங்கிப்பாடியுள்ள பதிகத்தில்காணும் திருமணக் காட்சிகளான தீவலம் வருதல் அம்மி மிதித்தல் முதலியவற்றைச் சீதையின் திருமணப் படலத்தில் கம்பர் தீட்டிய காட்சிகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் பயனுடையது.

அசோகவனத்தில் சீதையைக்கண்டு அனுமன் தெரிவித்த அடையாளங்களைப் பெரியாழ்வார் 'நெறிந்த கருங்குழல்' (3, 10)என்று தொடங்கி எட்டுப் பாசுரங்களில் கூறி அந்தப்பதிகத்தைத் தலைக்காட்டுகிறுர். கம்பர் சுந்தரக் காண்டம் உருக்காட்டுப் படலத்தில் இராமன் சீதைக்கு உணர்த்த வேண்டி அனுமனிடம் கூறியனுப்பிய செய்திகளை மூன்று பாசுரங்களில் முடித்துப் பின்பு சூடாமணிப் படலத்தில் இராமானுக்குச் சீதை அனுப்பிய செய்திகளைச் சற்று விரிவாகப் பாடுகிறுர். இங்கே பெரியாழ்வார் பாசுரங்களில் நாம் காணும் செய்திகளில் ஒன்று கூறப்பெறுகிறது. பெரியாழ்வாரின் பாசுரத்தைக் கண்டு பிறகு கம்பர் பாவினையும் காணலாம.

" சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கை
முலைதீண்ட
அத்திரமே கொண்டெறிய அனைத்
துலகும் திரிந்தோடி,
வித்தகனே! இராமாவோ!
நின்னபயம் என்றழைக்க
அத்திரமே அதன் கண்ணை அறுத்
ததுமோ ரடையாளம் "

" நாகம் ஒன்றிய நல்வரையின்
தலைமேனாள்
ஆகம் வநதெனை, வள்உகிர் வாளின்
அளைந்த
காகம் ஒன்றை முனிந்து அயல் கல்
எழு புலலால்
வேக வேம்படை விட்டது மெல்ல
விரிப்பாய் "

இவ்வண்ணம் கம்பர் தமது காவியத்தில் பலபடியாகத் திவ்யப் பிரபந்தப் பாசுரங்களைச் சுருக்கியும் விரித்தும் மெருகிட்டுக் காட்சிகளின் சூழ்நிலைகளுக்கு ஏற்ப எடுத்தாண்டுள்ளமை விரித்திடில் பெருகும். ஆழ்வார்களின் திருவாக்குகள் இலக்கணம் என்றால் அவற்றின் இலக்கியம் கம்பராமாயணம். ஆழ்வார்களின் பனுவல்கள் இலக்கியம் என்றால் அவற்றின் விரிவுரை கம்பராமாயணம். ஆழ்வார்களின் தேனுர் ஒலி கம்பரிடம் எதிரொலிககிறது. ஆனால் வெறும் சொல்லளவில் கம்பர்ஆழ்வார்களைப் பின்பற்றியுள்ளார் என எடைபோடக் கூடாது. திவ்யப் பிரபந்தத்தில் விரவியுள்ள வைணவக் கொள்கைகளையும் கம்பர் ஆங்காங்கே பேசிச் செல்கிறார்.

இங்ஙனம் பணிபுரிந்துள்ள கம்பரைப் போற்றுவதும் புநதியிற் கொள்வதும் அவரை ஏத்திப் பரவுவதும் தமிழறிந்த மக்கள் அனைவரின் கடமையாகும்.



## ஸப்த மாதர்கள்

1. பிராஹ்மி : பிரம்ம சக்தி. ஹம்ச வாகனம். கையில் ஜபமாலை கமண்டலம்.
2. மஹேஸ்வரி: சிவசக்தி. விருஷப வாகனம். கையில்திரிசூலம் நாகாபரணங்கள் தலையில் மதி.
3. கௌமாரி: கந்த சக்தி. மயில் வாகனம். சக்தி ஆயுதம்.
4. வைஷ்ணவி : விஷ்ணு சக்தி. கருட வாகனம், கைகளில் சங்கு, சக்கரம், கதை, சாரங்கம கத்தி.
5. வாராஹி : விஷ்ணு சக்தி வராக ரூபி. மஹிஷ வாகனம்.
6. நாரஸிம்ஹி : விஷ்ணு சக்தி நரசிம்ம ரூபி.
7. ஐந்திரி : இந்திர சக்தி. யானை வாகனம். கையில் வஜ்ராயுதம் ஆயிரம் கண்ணுடையாள்.

இவைகளில் 'நாரஸிம்ஹி'யை நீக்கிவிட்டு தேவியின் தேகத்தில் தோன்றிய 'சாமுண்டாதேவியை' சேர்த்து 'ஸப்த மாதாக்கள்' எனவும் வழங்கப்படுகிறார்கள்.

திரு. ஆர். சுப்பாராவ்-திருக்கோவலூர்.

# ஸ்ரீமத் இராமாயணம் இன்றளவும் சிறப்பதேன்?

நம் நாடு பரத கண்டம், பாரத தேசம், வேதம் விளைந்த நாடு, புண்ணிய பூமி என்ற பல சிறப்புப் பெயர்களைக் கொண்டது. இவ்வளவு சிறப்புப் பெயர்களைக் கொண்ட நம் நாட்டில் தோன்றிய மாபெருங்காவியங்கள்தான் ஸ்ரீமத் ராமாயணமும் மகாபாரதமும். இவ்விரு காவியங்களிலும் முதன் முதலில் தோன்றியது இராமாயணமே. இது திரேதா யுகத்தில் நடந்ததாகக்கூறுவர். இருப்பினும் இன்று உலகத்திலுள்ள எல்லா மக்களுக்கும் தெரிந்த கதை இராமாயணம் என்றால் அது மிகையாகாது. எனவே இராமாயணம் தோன்றிய இந்நாட்டு மக்களுக்கு, மற்ற நாட்டிலுள்ளவர்களைக் காட்டிலும் நன்கு அறியப்பட்டதும், தவிர சிறப்பாகவும் உள்ள நூல், 'இராமாயணம்' என்றால் ஆச்சரியமில்லை. பொதுவாக ஒரு காவியமோ, நூலோ இன்றளவும் சிறப்பாக உள்ளது என்பதற்குரிய பல காரணங்களில் முக்யமானது என்னவென்றால், அந்த காவியத்தையோ, நூலையோ எழுதி மக்களுக்கு அளித்த அதன் 'ஆசிரியர்கள்' தான் என்று உறுதியாகச் சொல்லலாம்.

நம் நாட்டு மக்கள் வேதம, கடவுள் முதலியவைகளில் மிகுந்த நம்பிக்கையும், பற்றும் கொண்டவர்கள. தவிர இந்நாட்டில்தான பெரிய மகரிஷிகள், தபஸ்விகள், முனிபுங்கவர்கள, மகான்கள், அனுபூதிமானகள் முதலியோர் தோன்றினர். அவ்விதம் தோன்றிய பல மகரிஷிகளுள் ஒருவர்தான் வால்மீகி ரிஷியும். அவர்தான், ஸ்ரீமத் ராமாயணத்தை வடமொழியில் எழுதி அளித்தவர். இருப்பினும் இராமாயணத்தை எழுத ஏற்பட்ட சூழ்நிலையும, எழுதுவதறகுரியசக்தியையும், தகுதியையும் அளித்தவர் சாட்சாத் பரம்பொருளே என்று தெரியும்போது, இராமாயணம ஏன் சிறப்பாக இருக்காது? மகாவிஷ்ணு தானே வால்மீகி மகரிஷிககு, இராமாயணத்தை எழுதக்கூடிய சக்தியை கொடுத்து விடவிலலை. மகாவிஷ்ணு, பிரமமா, நாரதர் மூலமாகவும அவர்களின ஆசியினாலும், அனுக்ரஹத்தினாலும், தவிர கல்விக்கு அதிபதியான கலைவாணியின் அருளினாலும், வால்மீகிக்கு சக்தியைக் கொடுத்து, அவர் வாயிலாக, உலக மக்களின் நலத்திற்காக எழுத வைத்தார். இங்கு ஸ்ரீமத் ராமாயணத்தின் முதலில் உள்ள ஸ்லோகம் நினைவில் வைக்கத் தகுந்ததேயாகும்.ஸ்லோகம் பின் வருமாறு.

'' தபஸ்வாதயாய நிரதம் தபஸவீ வாகவி
தாம வரம'
நாரதம் பரிபப்ரசச வால்மீகிகோ
முனிபுங்கவம்''

இதேபோல் கம்பராமாயணத்தின் தனிப் பாடல்களில் ஒன்றான பின் வரும் பாடலையும் நினைவில் கொள்ள வேண்டியது:

'' நாரணன் விளையாட்டெல்லாம்
நாரதமுனிவன கூற
ஆரணக் கவிதை செய்தான்றிந்த
வால்மீகி என்பான
சீரணி சோழநாட்டுத் திருவழுந்தூருள்
வாழ்வோன்
காரணக் கொடையான் கமபன
தமிழினால் கவி செய்தானே''

பெரிய மகரிஷிகளின வாககு எக்காலத்திலும் பொய்க்காதவை என்பதை எடுத்துக் காட்டுவதாக உள்ளதுதான் இராமாயணம். வால்மீகி மகரிஷியும் இராமாயணத்தின ஆரம்பப் பகுதியிலேயே இக்காவியமானது உலகத்தில் ஆறுகளும், மலைகளும் இருக்கும் வரையிலும், 'இராமாயணமும்' நிலைத்து இருக்கும் என்று கூறியுள்ளார். இங்கு வால்மீகியின் ஸ்லோகமும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டியது அவசியமாகிறது.

'' யாவத்ஸ்தாஸ்யந்தி கிரய: சரிதஸ்சச
மஹீதலே
தாவத ராமாயண கதா லோகேஷு
ப்ரசரிஷ்யதி''

மகரிஷிகளின் வாக்கு பொய்க்காதவையாதலால்தான, திரேதா யுகததில் நடந்த இராமாயணமானது இன்றும் அநேகமாக நாட்டின் எல்லா மக்களும் நன்றாக அறிந்து இருப்பதினாலேயே, இராமாயணம் சிறப்பாக உள்ளது என்பதறகுரிய பல காரணங்களில் இதுவும் ஒன்றாகிறது.

திரு D. கேசவன்,
அல்லூர்.

நம் நாட்டு மக்கள் சுருதி, ஸம்ருதி, இதிஹாசம் இவைகளை அனுசரித்து நடப்பவர்கள். சுருதி என்பது வேதம், வேதத்தில் உள்ளவைகள் எல்லாம் ஓர் அரசன் தன் குடிமக்களுக்கு உத்தரவிடுவதுபோல் எல்லாம் ஆணையாக அமைந்துள்ளன. வேதங்கள் இடும் கட்டளைப்படி நடப்பது மிகவும் கடினம். இவைகளைக் கண்ணுற்ற ஜைமினி, யாக்ஞவல்கியர், வைசம்பாயனர், மனு போன்ற தவ வலிமை மிக்கவர்கள் வேதங்களில் உள்ளவைகளை எளியதாககி 'இவைகளைச் செய். இவைகளைச செய்யாதே. இவ்விதம்தான நடந்து கொள்ள வேண்டும்'' என்று ஒரு நண்பன், மற்றொரு நண்பனுக்குக் கூறுவது போல், அறிவுரைகளாக தொகுத்து அளித்திருப்பதுதான் ஸ்ம்ருதி என்பதாகும்.

இவ்விதம் அறிவுரைகளை தொகுத்துக் கொடுத்திருந்த போதிலும், தபஸ்விகளுக்கு திருப்தி ஏற்பட

வில்லை. அதனால் இவைகளை ஒரு நாடகம போல் நடததிக் காட்டி, மக்களை அதன் வழியாக, நல்வழியில் நடத்திச் செல்ல, திருவுள்ளங் கொண்டு, 'இராமாயணம், மகாபாரதம்' என்ற மாபெரும் இதிஹாசங் களைப் படைத்து மக்களுக்கு அளித் தார்கள். இந்த இரண்டு இதிஹாசங் களிலும், இராமாயணமே சிறப்பாக வும், எல்லோருக்கும்தெரிந்ததாகவும் உள்ளது. தவிர இராமாயணமானது, நம் நாட்டிலுமின்றி சுமத்ரா, ஜாவா, மலேசியா, பாலித்தீவுகள் போன்ற அயல் நாடுகளிலும்கூட பரவி இருக்கிறது என்பதற்குச் சான் ருக அந்நாட்டிலுள்ளபெயர்களும் சில நாடகங்கள் இராமாயணத்தை அடிப் படையாகக் கொண்டு திருவிழாக் காலங்களில் நடைபெறுவதையும்இன் றும் காணலாம். இராமாயணத்தி லுள்ள கருத்துக்கள், நீதிகள் முதலி யவை எல்லோருக்கும், எககாலத் திற்கும் ஏற்றவையாக இருப்பதே இராமாயணம் இன்றளவும் சிறப்பாக வுள்ளது என்பதற்கு ஒரு காரணம் என்ருல் அது மிகையாகாது. உலகத் தில் பொதுவாகக் கூறப்படும் நல் வார்த்தைகள், நல்ல அறிவுரைகள் பெற்றோரிடம் பக்தி, பெற்றோர் சொல்படி கேட்டு நடத்தல், பெற் றோரை மனம்நோகாமல்காப்பாற்று தல், சகோதர ஒற்றுமையும் பாச மும், நல்ல நண்பர்களை அடைதல், நட்புக்கு இலக்கணமாக இருத்தல், நல்ல சீரிய ஒழுக்கம், தவிர பெண களுக்குரிய கறபு, பெண் வாழ வேண டிய முறை, நாட்டுப்பற்று முதலி யவை எல்லாம், எல்லா மதத்தை சேர்ந்தவர்களுக்கும், எல்லா நாடு களுக்கும், எக்காலத்திற்கும் பொருத்தமாகவும், ஏற்றதாயும் உள்ளதை இராமாயணத்தில் கூறப் பட்டிருக்கிறது. தவிர இராமாயண மூலமாக இவைகளை நன்ருக எடுத் துக் காட்டியிருப்பதால், இராமா யணம் சிறப்பாக உள்ளது என்பதற்கு ஓர் காரணமாகிறது. தவிர ஒரு அரசன் எவ்வாறு ஆட்சி செய்ய வேண்டும், குடிமக்களிடம் எவ்விதம் பழகி நடந்து கொள்ள வேணடும் முதலிய அரசநீதி, ராஜ தர்மங்கள் எல்லாம் நன்ருக விளக்கப்பட்டிருப்ப தாலும் இராமாயணம் சிறப்புடைய தாகிறது.

ஒரு காவியமோ, நூலோ மக் களுக்கு ஏற்படும் மனச் சோர்வு, இன்னல்கள் ஏற்படும் போதும் உறுதுணையாக நின்று அச்சோர்வை யும், இன்னல்களையும் போக்குகிறது என்ருல், அக்காவியத்தின் அல்லது நூலின் கருத்துக்கள் வலிமை மிக்க தாக உள்ளன என்று பொருளாகும். அதாவது நூலாசிரியர், மனவலி மையை தரத்தக்க முறையில் கருத் துக்களை அமைத்துள்ளார் என்பதே யாகும். அவ்விதம படிப்பவர்களுக் கும், கேட்பவர்களுக்கும் மன அமைதி யைக்கொடுத்துப்பெரும் துணையாக இருக்கும் நூல்களில் முதலாவதாக இடம் வகிப்பது இராம கதையான, இராமாயணமேயாகும்.

ஒரு காவியம் என்று கூறும் போது, காவியத்திற்குரிய லக்ஷணங்களான சருக்கங்கள், படலங்கள், காவியத் தலைவன், தலைவி, வீரம், காதல், நல்ல பண்புகளை விளககிக் காட்டு தல், தீயவைகளை விலக்குதல, நாடு, நகர், மலை, பருவம், சூரியன், சந் திரன, கடல் முதலியவைகளின வர்ணனைகள் இடம் பெற வேண்டும என்பர். அதே போல் காவியத்தின எதிர் தலைவன், தலைவி, அவன வீரம் முதலியவைகளும் இடம் பெற வேண்டும. தவிர அறம், பொருள், இன்பம், வீடு முத லிய பேரின்ப வாழ்கை வாழ்வதறகு உறுதுணையாக உள்ள நூலே சிறநத காவியமாகும். இததகைய எல்லா இலக்கணங்களோடு கூடினதாக இராமாயணம் இருப்பதாலேயே, இன் றளவும் அதுசிறப்பாக உள்ளது என்று உறுதியாகச்சொல்ல முடிகிறது.

பாற்கடலில் பள்ளி கொண்ட பரமன, தேவர்கள், மற்றுமுள்ளோரின் வேண்டுகோளுக்கிணங்கி, இராம காவியத்தின் எதிர் தலைவனான இராவணன் பெற்றிருந்த வரங்களையும் கருத்தில் கொண்டு, சாதாரண மனிதனாக அவதாரம் செய்தார். பகவான் மனிதனாகப் பிறந்து, மனிதனாகவே வாழ்ந்து, மானிட தர்மத்தினபடி வாழ்ந்து காட்டினன். தவிர மனிதர்கள் இன்னல் ஏற்படும்போது எவவாறு மனக்கவலையுடன், ஆகாரமின்றி, தூக்கமின்றி அலைந்து வாழ்வார்கள் என்பதை இராமன் சீதாப் பிராட்டியைப் பிரிந்த பிறகு நன்றாகவே நடித்துக் காட்டி வாழ்ந்து காட்டிய நூல் இராமாயணமாகும். இராமன பாலராமனாக இருந்த போதும், பின்னால் இராவணவதத்திற்குப் பிறகு, அயோத்திக்கு சக்ரவர்த்தியாக முடி சூட்டிக் கொண்டு அரசாண்ட காலமும் இராமாயணத்தில் அதிகம் பேசப்படவில்லை. ஆனால் இராமனின் 14 வருட வனவாசத்தின்போது ஏற்பட்ட அனுபவங்கள், நிகழ்ச்சிகள், யுத்தங்கள், இராமனை சந்தித்த பல பெரியோர்கள் முதலியவைகளைப் பற்றித் தான் இராமாயணத்தில் அதிகம் பேசப்படுகிறது. வனவாசத்தின் போது இராமனுக்கு ஏற்பட்ட சில நிகழ்ச்சிக் கொண்டு இராமாயணம் ஏன சிறப்பாக உள்ளது என்பதையும் ஆராயலாம்.

முதலாவதாக இராமன் குணக கடலாகத் திகழ்ந்தான். அவன் 'தநதை சொல் மிக்க மந்திரமில்லை' என்ற முதுமொழிக்கிணங்க தந்தை சொல்லை காப்பாற்றுதலையே அறமாக கொணடிருந்தான். இராமனின் தந்தையான தயரதன் நாளை இராமனுக்கு இளவரசுப் பட்டாபிஷேகம் என்று சொன்னதைக் கேட்டும், பிறகு அடுத்த நாளே வனவாசத்தை ஏற்றுக் கொண்ட போதும் மனமும், முகமும் மாறாமல் அக, முகமலர்ச்சியோடு ஏற்றுக் கொண்டான் என்பது சுக, துக்கங்களைச் சமமாக எண்ணுபவன் என்ற சீரிய குணத்தைக் கொண்டவன் இராமன் எனபதைக் காட்டுகிறது. இதுகுக் கம்பனின் பாடலின் கடைசி அடியான 'அன்றலர்ந்த செந்தாமரையை ஒத்ததம்மா' என்று இராமனின் முகவர்ணனை மிகவும் நயமாக உள்ளது. இராமன் இளம் அரச குமாரனாக இருந்தபோதே அவனுடைய சீரிய நற்குணங்களால், அயோத்தி மக்கள் அனைவராலும் பெரிதும் விரும்பப்பட்டிருந்தான். எல்லாம் மக்களிடமும மிகவும் அன்பாகவும், இனிமையாகவும், பழகும் குணவான் என்பது நன்றாகவே எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. தான் அரச வம்சத்தை சேர்நதிருந்த போதிலும், வனவாசத்தின் போது, வேடர் குல மாணிக்கமான குகனை தன் 4-வது தம்பியாக ஏற்றான். பட்சியாகிய சடாயுவுக்கு தன் தந்தையின் இடத்தை கொடுத்து அவருக்கு ஈமக் கடன்களையும் செய்தான் என்று நோக்கும் போது 'சௌலப்யம்' என்ற மகத்தான குணம் அதாவது உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்று பராராது எல்லோரையும் சமமாக எண்ணுதல் என்ற குணம் காட்டினான். தவிர மிருக இனத்தைச் சார்ந்த சுக்ரீவனுடன் நட்புக் கொண்டு அவனை தன் 5-வது தம்பியாகவும், அரக்கர் குலத்தை சேர்நத விபீஷணனுக்கு அடைக்கலம் கொடுத்து அவனையும் தன் 6-வது தம்பியாக ஏற்றுக் கொண்டது போல் வேறுயாராதானசெய்யமுடியும். தன் மனைவியாகிய சீதாப்பிராட்டிக்கு தீங்கிழைத்த காக்காசுரன் கொல்லப்பட வேண்டியவனுக இருநத போதிலும், மிகுந்த கருணையினால் சரணாகதியாக விழுந்த அக்காக்கையைக் கொல்லாமல் ஒரு கண்ணழிவே செய்து, "கருணாகாகுத்தன்" என்ற பெயரையும் அடைந்தான். இங்கு இராமனுடைய பொறுமை என்ற சீரிய குணம் காட்டப்பட்டுள்ளது. மற்றும் தன் மனைவியைத் தவிர வேறு மாதரை சிந்தனையினாலும் எண்ணாமல், அவர்களைத் தாயாக எண்ண வேண்டும என்பதையும், அதே போல மாதர்கள் தன கணவனைத் தவிர மற்றவரை உடன் பிறந்தானாகவே எண்ணி நடக்க வேணடும் என்ற உலக பொதுநீதியையும் வலியுறுததிச சொல்கிறது இராமாயணம். இங்கு வால்மீகியின் வாக்கான, "ந இராம: பரதாரான்வை சக்ஷுர்ப்யாமபி பஸ்யதி" என்பதையும், கம்பரது வாக கான, "இப்பிறவியில் இருமாதரை சிந்தையிலும் தொடேன்" என்பதையும் நாம் நன்கு மனதில் கொள்ள வேண்டியது. அதாவது 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற நீதியை எடுத்துக் காட்டுகிறது இராமாயணம்.

பகைவர்களும் போற்றும்படியான பண்பான குணம் இராமன் ஒருவனிடம்தான் காண முடிகிறது. பல பட்டிமன்றங்களிலும சர்ச்சைக்கு இடமாய் இருக்கும், 'வாலிவத'த்தில் கூட, வாலி இராமனுடைய அம்பினால் அடிபட்டு கீழே கிடககும் போது, இராமன் நேரில் வந்தான். இராமனுக்கும் வாலிக்கும் வாத, பிரதிவாதங்கள் முடிந்தபின,வாலியே இராமனைப் புகழ்ந்து தம்பி சுகரீவனுக்குக் கூறுவது பின்வரும் கம்பர் பாடலினால் நன்கு தெரிகிறது.

" மறைகளு முனிவர் யாருமல்மிசை
யயனுமற்றைத்
துறைகளின் முடிவுஞ்சொல்லுந்
துணிபொருடுனி விற்றூக்கி
அறைகழலி ராமனாகி யறநெறி
நிறுத்தவந்த
இறையொரு சங்கையின்றி யெண்ணுதி
யெண்ணமிக்கோய்."

மறறும் 'மூவர் நீ, முதல்வன் நீ, முற்றும நீ, மற்றும் நீ, பாவம நீ, தருமம நீ, பகையும் நீ, உறவும் நீ என்ற கம்பராமாயண அடியின் மூல மாகவும்' நன்கு தெரிய வருகிறது. வாலியைத் தவிர அவன் மனைவி தாரை, மண்டோதரி கூட தன் கணவர்கள் இராமனுல் கொல்லப்பட்டிருந்த போதிலும், இராமனை வெகு

வாகவே புகழ்ந்திருக்கிறார்கள். அது மட்டுமின்றி இராமனால் கொலலப் பட்ட, ''விராதன், கபந்தன்'' என்ற அரக்கர்களகூட இராமனைப்போற்றி துதி செய்துள்ளனா. இதனால், ''பகைவரும் போற்றும் பண்பான குணமுடையவன் இராமன 'என்பது நனகு எடுத்துக் காட்டப்பட்டுளளது. தவிர இராம, இராவண யுத்தத்தில் இராவணன், இராம பாணங்களினால் அடிபட்டு தேர், தேர்ப்பாகன், ஆயு தஙகள, மகுடஙகள முதலிய எலலா வறறையும் இழந்து, தனித்து இராவணன மடடும் இராமன எதிரில் நினறான. இசசமயம இராமன விரும்பியிருநதால், இராவணனை வீழ்த்தி இருககு முடியும. ஆனால் அப்படிச் செய்யாமல் அவனுடைய வீரத்தையும் பலத்தையும நன்கு மதித்து இராவணனை, 'போருக்கு இன்று போய் நாளை வா' என் கிறான் கோசல நாடுடைய வள்ளல். அதாவது எதிரி ஆயுதமில்லாமல் இருக்கும்போது கொல்லக் கூடாது என்ற யுத்த தர்மத்தை நன்கு அறிந தவனாகவே இருந்தான் என்பதை உலகத்திற்கு எடுத்துக் காட்டினான். பகைவர்களும் போற்றும் பண்பாள னாக இராமன் இருப்பதினால்தான், இராமாயணம் சிறப்பாகவே இன்றள வும் உளளது என்பதற்கு மற்றொரு காரணமுமாகிறது.

பொதுவாக நம் நாட்டு மக்கள இராமனை மகாவிஷ்ணுவின் அவ தாரம் என்பதை நனகு அறிநதவர் கள. அதனால் இராமனைக்கடவுளாக வழிபட்டு வருகிறார்கள. பொதுவாக பகவானைவிட, பகவான நாமமே பெருமையுடையது என்பதையும நன்கு உணர்ந்தவர்கள். அதுபோல் இராமநாமத்திறகு தாரக நாமம் என்று பெயர். அனுமன் இராம நாமத்தைச் சொல்லிக் கொண்டே கடலைக் கடந்தான் என்று இராமா யணம் கூறுகிறது. இராமநாமம் தான் அனுமனுக்கு உறுதுணையா யிருந்தது எனலாம். உயிர் காக்கும் நாமமாக இராமநாமம் இருந்தது. தற்கொலை செய்து கொளளலாம் எனறு முடிவு எடுத்து, தன முடி யினால் கழுத்தை சுற்றிக் கொணடு மரக்கிளையையும் சுற்றி, சீதை உயிரைவிட முயன்றபோது, சீதை யின உயிரைக் காத்தது அனுமன் கூறிய இராம நாமமேயாகும். தவிர பார்வதி, பரமசிவனைக் கேட்கிறாள்: அதாவது மகாவிஷ்ணுவின் ஆயிரம் நாமஙகளிலும சிறநததாயும், சுலப மானதாகவும உள்ள நாமம் எது எனறு கேட்க, ஈஸவரனும இராம, இராம என்ற நாமமே ஆயிர நாமஙகளிலும மிகவும் சிலாக் யமானது என்று கூறுகிறார். தவிர பரமேஸ்வரனும் இராமநாமததை தானும எப்போதும் சொல்லிக கொணடிருப்பதாக புராணம கூறு கிறது. மற்றும் காசியில் மரணமடை பவர்களின் நல்ல கதிக்காக, அவர் களின் காதுகளில் இராமநாமத்தை கூறுவதாகவும் உள்ளது. இக்காரணத் தினாலும் இராமாயணம் சிறப்பாக உள்ளது என்று கூறமுடிகிறது.

பகவானை அடைய அநேக வழி களுணடு. எல்லா வழிகளைக் காட்டி லும் மிகச் சுலபமான வழி, 'சரணா கதி' வழியாகும் சரணாகதி என்பது பகவானிடத்தில் முழுமையாக தன் னுடையதான எல்லாவற்றையும் துறநது, நான என்னும் அகங்கார மும போய், தன்னையே பகவானிடத் தில், முழு நம்பிக்கை வைத்து அவன் காப்பாற்றுவான் என்று பகவான் திருவடிகளை அடைக்கலமாக பற்றிக் கொள்வதுதான் சரணாகதியாகும. ஒரு தடவை இராமனிடம் சரணாகதி செய்தாலே, அபயம் கொடுப்பதைக் கடமையாகக்கருதுகிறவன் இராமன். இங்கு இராமாயண ஸ்லோகம், 'ஸக்ரு தேவ ப்ரபன்னாய தவாஸ்மீதிச யாசதே அபயம் ஸர்வ பூதேப்ய: ததாமியேதத் வ்ரதம் மம' என்று இராகவன் ஆணித்தரமாகக் கூறியுள் ளான். தவிர இராமாயணத்தில் தேவர்கள், தசரதன், பரதன், சுக்ரீ வன், விபீஷணன், சயந்தன் என்னும காக்கை முதலிய பலரும சரணாகதி செய்து பலனை அடைந்தனர். இராமாயணத்திற்கே, 'சரணாகதி சாஸ்த்ரம்' எனற பெயரும் உண்டு. சரணாகதியை தலையானதாகக் கொணடுள்ளதால், இராமாயணம இனறளவும் சிறப்பாக உள்ளது என்று திட்டவட்டமாகக் கூறமுடிகிறது.

முடிவுரை :

ஸ்ரீமத் இராமாயணம மனச சோர்வை போக்கும மருநதாகவும், நமபிக்கையானதாகவும் உள்ளது. இராமாயணத்தை தினமும் நியம மாகப் பாராயணம் செய்பவர்களும இருக்கிறார்கள். சிலர் ராமாயணத் தின் நடுநாயகமாகவும், முக்யமான காணடமாகவும் இருக்கும். 'சுந்தர காண்டத்தை' மட்டும், இன்றுவரை யிலும் பாராயணம் செய்து வரு கிறாாகள். இதற்குக் காரணம், சுந்தர காண்டமானது, பாராயணம் செய்பவர்களுக்கு மன வலிமையை யும் கொடுத்து, இன்னல்களையும் நீக்குகிறது என்று நம் நாட்டு மக்கள் நன்கு உணர்ந்திருக்கிறார்கள், என் பதே பொருள். தவிர இந்த இராம காவியம், காவியத்தின் தலைவனான இராமன்முன்னிலையில் தன் குமாரர் களான, 'லவன், குசன்' ஆகிய இரு வராலும் காவியம் முழுவதையும் அதாவது தன கதையை தானே நேரில் கேட்டு மகிழ்ந்தது என்ற பெருமையும் இநத இராமாயண மகா காவியம் ஒன்றுக்குத்தான் உண்டு. இராமாயணமானது தந்தை சொல் காத்தல், 'ஒரு சொல், ஒரு வில்,' ஒரு இல்' எனபதை வலியுறுத்திச்சொல்லு கிறது. மறறும அரசநீதி, அரசர்களு டைய கடமை, அரச தர்மம், அர சாளும் முறை, நல்ல நண்பர்களை நட்பாகக் கொள்ளுதல், பெண்கள் கடமை, பெண்கள் தர்மம், தவிர சரணாகதி (அடைக்கலம்) முதலிய பல நீதிகளை எல்லா நாட்டுக்கும்

(40-ஆம் பக்கம் பார்க்க)

# ஞானப் பெண்

உலகம் உய்ய, உலகில் மக்கள் உயர்வு பெற, ஒருமையுடன் இறைவன் திருவருளைப் போற்றிப் பணிய ஆன்றோர் பலர் அவதரித்து அறபுதங்கள் பல நிலைநிறுத்தி அரிய தத்துவங்களை நாம அறியும் வண்ணம் அறிவுறுத்தியிருககிறார்கள். ஆன்மீகம் என்பதும், புராணம் எனபதும் பொய்யானவை வாழ்க்கைக்கு உதவாதவை என்பது நாத்திகவாதிகளின் வாதம.

ஆன்மீகமும் அறிவியலும் பின்னிப் பிணைநது வாழ்க்கைக்கு நல்வழி காட்டும ஞான தீபங்கள். புராணம் என்பது மனிதன் மனிதனாக வாழ பெருமையுடன் பூவுலகில் நிறை வாழ்வு பெற அரிய கருத்துக்களைத் தெளிவாக்குவதாகும்.

உலகம் தோன்றி மனிதகுலம் மாண புற்ற காலம் முதல் இன்று வரை எத்தனையோ மகான்கள், சித்தர்கள், அறிஞர்கள அற்புதங்கள் பல நிலையாக்கி கதைகளாகவும், காவியங்களாகவும், உபதேசக் கட்டுரைகளாகவும, பாடல்களாகவும், பல காலமும் பயன்படும் முறையில் அளித்து வந்ததையும், அளித்து வருவதையும அறிந்து உணமைப் பொருளை உணர்ந்து உயர்வு பெற வேணடியது நம் கடமையாகும்.

தெரிநத புராணக் கதை ஒன்றை நினைவு கொள்வோம். அதில் பொதிந்துள்ள அற்புத நீதியினை உணர்ந்து செயலபடுவோம். இதுபோல் ஒவ்வொரு செயல்பாட்டிலும் உளள உட்பொருள் உணர்ந்து உலகினில் நலம் நாட்ட விழைவோம்.

வேடர் குலத்துதித்த வள்ளி வேண்டித் தவம் இருந்தாள் முருகனை அடைவதற்கு. தினைப்புனம் காக்கும்போது நாரதர் வந்து முருகனைத் திருமணம் புரியுமாறு உபதேசிககிறார். வேலவன் வேடனாக வந்தான. வள்ளி அறிந்த பாடில்லை. வேங்கை மரமாக நின்றான். பின் கிழவனாக வநதான். உணரவில்லை ஓங்கார விநாயகன உதவியோடு உணமையுணர்நதாள். வள்ளி முருகனோடு இணைத்தாள. இது யாவரும் உணாந கதை. உணர வேண்டிய நீதியாம் உண்மையாது? உட்பொருள் உணர்ந்தால் நற்கதி பெற ஞானம் பொலிவாகும். அஞ்ஞானம் மறைந்து மெஞ்ஞானம் பரிமளிக்கும்.

மான் மகள் வள்ளி என்பர். நம் மனத்தில் பிறக்கும் ஞானவடிவாகியதே வள்ளி என்பதாகும். வள்ளிக் கொடியின் கீழே கண்டெடுத்ததால் வள்ளி எனற பெயர் சூட்டி வளர்ந்தான் நம்பிராஜன் என்ற வேடர் தலைவன்.

மனித உடல நிலைத்திருக்கும் பேறு பெற்றதாக எணணி "நானே ராஜா" எனற அகம்பாவம் கொணடு, புறச் செயல்களில் நம்பி, அதுவே சிறநததென ராஜாங்கம் நடத்துகின்ற இந்த மானிடத் தோற்றம் "நம்பிராஜன" ஆகும். ஆசாபாசங்கள் பின்னிப் பிணைந்த இவ்வுடலுள் தோன்றி இயங்கவைக்கும் ஆன்மா—ஜீவாத்மா எனப்படுவதே வள்ளியாகும். வள்ளி என்னும் ஜீவாத்மா ஒவ்வொரு மனிதனிடமும் உள்ளதைக் கண்டறிய வேணடும். அந்த ஆன்மா ஞானச் சுடராக விளங்கச் செய்ய வேண்டும்.

வளர்ந்த வள்ளி பருவ மங்கையானாள். தினைப்புனக் காவலுக்கு அனுப்பப்பட்டாள். அவளுக்குத் துணையாக வேடர்கள் காவல்புரிகின்றார்கள். பறவைகள் தினைப்புனத்தில் புகுந்து விடாமல் ஆலோலம் பாடி விரட்டித் தினைப்புனம் காக்கின்றாள்.

மனப்பக்குவம் பெற்ற மனித இனம் புன்செய் நிலப்பயிரான தினையைக் காக்கிறது. அற்பமான செயல்பாடுகளான சிற்றின்பத்தினை சிறநததென எணணி அதையே போற்றிப் பாதுகாக்கின்ற செயல்பாடுகள். பறவைகள் பறந்து செல்வதுபோல மனித உடல்களை விட்டு ஆவி வெளியேறும். கவண் வீசிக் கல்லெறிவது போல பிறருக்கு உதவாமல் பிறர் உதவி நாடி வந்தாலும் தனக்கென வாழ்வதற்காக, தான், தனக்கு என்ற மாயை மிகக் கொண்டு மற்றவற்றை அற்பமாக எண்ணிச் செயல்படுவதாகும்.

---

திரு. வெ. சுந்தரமய்யர்,

பரமக்குடி.

---

துணையாக இருக்கும் வேடர்கள் யாவர்? ஐம்புலன்களும் கை, கால் போன்ற உறுப்புகளுமே வேடர்களாகும். வேடாகள் வேட்டையாடுவது தொழிலாகக் கொண்டவர்கள். நமது உடல உறுப்புக்களான வேடர்களும் வேட்டையாடிக்கொண்டுதான் இருக்கினறார்கள். கண் ஒன்றை நோக்கியும, காது ஒனறைக் கேட்டும், நாசி ஒன்றை நுகர்ந்தும், நாவு ஒன்றைப் பேசியும், கைகள் ஒன்றைச் செய்தும், கால்களோ இவற்றிற்குத் துணை செய்ய பல்வேறு இடங்களுக்குச் சென்றும் வேட்டையாடுவதை மறுக்க முடியுமா? முடியாதே!

இசையைக் கேட்டுக் கொண்டிருக்கும் செவி அதே நேரம் அழகிய உரு

வத்தைக் கண்கள் பார்த்துக் கொண்டிருக்கும். வாய் வேறொன்றைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கும். இவவாறு மனத்தை ஒரு நிலைப்படுத்த முடியாதபடி உறுப்புக்களாகிய வேடர்களதங்களது செயல்பாடுகளுக்கேற்ப இழுதடுக்கொள்வதைக் காண முடியும்போது உறுப்புக்களை வேடர்கள் என்றுதானே கூற முடியும்.

தான், தனது, தன் பொருள் என்ற இச்சை மிகக் கொண்டு ''ஆ'' என ஓலமிடுவதே ஆலோலம் ஆகும். பிறருக்கென வாழாது தனக்கென வாழ்ந்திடும்போது ஆசைமிகும். ஆசை மிகுந்திட விட்டுக்கொடுக்கும் பக்குவமில்லாத நிலை ஏறபட அல்லல்மிகவே நம்மைச் சூழும். அதை (அலலலை) விரட்டும் முயற்சியில் ஈடுபடுவதைக் காட்டும் ஆலோலம், அற்பமான (புன்செய்) பயிரைக் காக்க விழைகின்ற நிலையை விளக்கும்.

ஞானம் என்னும் கூர்வேல்கொண்ட முருகன்-அவன்தான் அழகன். இறை என்னும் அழகு இணையில்லா இன்பந்தரும் அழகு. அந்த அழகை விரும்பாமல் அழிவுறும் அழகில் மயங்கி நிலையற்ற பொருள்களை விரும்பி வேட்டையாடிப் பெறவும், காக்கவும் முயல்கின்றபோது தடுததாட்கொள்ள தானே முன்வருவான் இறைவன். அவ்விறைவனை அடையுமுன் குரு உபதேசம் வழிகாட்டியாக அமையும்.

தினைப்புனக் காவல் காக்கும் வள்ளியிடம் நாரதர் வநது உரையாட வள்ளிக்கு முருகன மீதில் காதலாகிறது. முருகனை அடைய மனம் நாடுகிறது. அம் முருகனையே எணணி, போற்றிப் புகழ்கிறது மனம்.

மானிட வாழ்வில் நல்லதைச் செய்ய, நல்லோர் உபதேசம் நடைபெறுகிறது. கோயிலுக்குச் செல்லவும், இறை வழிபாடு செய்யவும், நல்லவைகளைக் கேட்கவும், நல்லதைப் பார்க்கவும் பெரியோர்கள் தூண்டுகோலாக அமைகின்றதோடு நல்லுபதேசங்களும் செய்கின்றார்கள். எச செயலுக்கும பரம்பொருள் காரண கர்ததா என உணரச செய்விக்கிறார்கள்.

நாரதா முருகனிடம் வளளியைப் பற்றிக் கூறியதோடு மாறுவேடமிட்டுச சென்று ஆறுதலைத் தரச் சொல்லியபடி வேடனாக, விருத்தனாக முருகன் வள்ளியிடம் சென்று விளையாடுகிறார்.

இறைவன் பற்பல வேடஙகளில் திருவிளையாடல புரிவான். அவனை அடையாளம கணடு கொள்ள உணமையான பக்தியை உளமார நிலைநிறுத்த வேணடும். கண்ணுக்கு எளியனாகக் காட்சி தந்து நம்மை சோதிப்பது இறைவனின திருவிளையாடலாகும். திரு அருளை விளைவிக்கும் ஆடல் அல்லவா? இறைவன், அவரவர் விருப்பத்திற்கேறப அவதாரம கொள்கிறான். அருள் பாலிக்கிறான். இதை உணர்த்தும் முகமாக வேடர்களின் பாதுகாப்பில் உள்ள ஞானப் பெண்ணும் வள்ளிமுன் வேடனாகத் தோன்றினான். உறுப்புக்களாகிய வேடாகள் அறியாவண்ணம் இதயத்தில் ஆன்மாவிடம் தோன்றினான்.

வேடமிட்டுள்ள நாதனை வள்ளி உணரவில்லை. எநத உருவிலும், எந்த நிலையிலும் தோன்றலாம. ஆனால் நாம் அதை உணர்வதில்லை.

''காயாத கானகத்தே நினறுலாவும்—நற்
காரிகையோ''.

என்று வளளியை நோககி வேடனாக வந்த முருகன் பாடுவதும் யாவரும் அறிந்ததே.

என்றுமே காயாத ஈரமுள்ள'இரக்க முள்ள) ஈசன், ஆசாபாசங்கள் நிறைந்த உடலாகிய காட்டுக்குள்ளே (கான் அகத்தே) நின்று நிலைபெற்று உலவுகின்ற தெய்வம். நற்காரிகையான ஞானப்பெண்ணாகிய ஜீவாத்மாவாகிய ஆன்மாஎன்றமெய்ப்பொருள் அனறோ அநத வரிகள். பாடல முழுமைககும பொருள கூற முறபட்டால் எடுத்துக்கொணட கருப்பொருள் விரிக்க நேரமின்மையாகும். எனவே வேடனின செயலைக் காணச் செல்வோம்.

வேடனாக வேடமிட்ட மெய்ப்பொருளை உணரா நிலையில், வள்ளி மெய்ப்பொருளை உதாசீனம் செய்ய வேங்கை மரமாகி நின்றான் அந்த அழகன். மரத்தை வெட்ட வந்த வேடுவர்களை வெட்டவிடாமல் பல்லி தன் சொல்லால் தடுக்கிறது.

பல்வேறு வடிவங்களில் இறைவன் அருள் பாலிக்க வந்தபோதிலும் ஆனமா அதைக் கண்டு கொள்வதில்லை. இருந்தபோதிலும் அறிவின் சுடராக, ஆன்ம ஞானப் பேரொளியாக விளங்கும் நூல்களையாவது கற்றுத் தெளிதல் வேண்டும். இதை, நம்முன் உள்ள நல்ல நூல்களை உணர்த்திடவே கற்பகத்தருவாகி நின்ற காட்சி. மரத்தின்வேர் வேதங்கள். அடி மரம் அவ்வேதக் கருத்துக்களின் வலிமையாகும். கிளைகள் புராண, இதிகாச, நூல்கள். இலைகள் புராண இதிகாசங்களின் கிளைக் கதைகள். கதைக் காவியங்களின் இன்பங்கள மலர்களாகும். வேத சாரததின் தத்துவங்களே காய் கனிகளாகும்.

பயனறற உளுதத மரம்போல வாழாமல, வேஙகை போல் வீறுகொணடு உறுதிப்பாடு உணாத்தும் உன்னத நூல்கள் மூலம் பேரின்பக கனியுண்ணுங்கள் என நமக்கு நினைவூட்டும் அற்புதத் தத்துவமே வேங்கை மரமாகி நின்றது.

பல்லி சொல்லுக்குக் கட்டுப்பட்டு மரத்தை வேடர்கள் வெட்டாது சென்றனர். பல்லோர் சொல்லும் நல்லதை ஏற்று செயல்பட வேண்டும் என்பது ஒரு குறிப்பு. மற்றொன்று

(பல்லிப் போன்ற) அற்பமானவர்கள் என நாம் நினைத்தாலும் அவர்கள் கூற்றிலும் உயர்வான எண்ணங்கள் அமைந்திருக்கும். அற்பர் என அலட்சியபபடுத்தக்கூடாது எனபதாகும். மேலும் மரங்களே மனித உயிர்கட்கு மகததான துணை புரிவன. காற்றும், நீரும், உணவும உயிர்கட்கு அளித்து சுற்றுச்சூழல பாதுகாபபுக்கு உறு துணையாக அமைவன. எனவே மரங் களை அழிககக்கூடாது என்பதும உட்பொருளாகும்.

வேடனாக வந்து வேங்கை மரமாகி நின்றவன் வேறு ஓர் உருவமாக விழைந்தான். கிழவனாகத் தோற்றங் கொணடான். விருத்தன் உருவத்தில் வேடமிட்டு வநததையும் வள்ளி உணரவில்லை. விநாயகரை உதவுமாறு வேணடினான் முருகன். ஆனை முகனான பெருமான் "யானை" வடிவெடுத்து வந்தான். யானைககுப் பயந்து விருத்தனிடம் சரணடைகின்றாள் வள்ளி. வள்ளிக்கும் வேலனுக்கும் திருமணம் நடைபெறுகிறது.

விருத்தன் என்பதே முதிர்ந்தவன் என்பதுதானே! உலக உயிரினங்கள் யாவையும் ஆக்கி, காத்து, அழிக்கும் வல்லமை மிக்க ஒருவன் எநநிலையிலும முதிர்ச்சியுள்ளவன் அல்லவா? அறிவின முதிர்ச்சியைக் கொடுப்பவன அவனே. அதனால் விருத்தன-விருத்தியைத் தருபவனாவான்.

கிழவன் எனறால் உரிமையுள்ளவன் என்ற பொருள் உணடே! எவ்வுயிருக்கும், எப்பொருளுக்கும் உரிமையுள்ளவன அவன் ஒருவனே என்பதை விளக்குவதற்காகவே கிழவனாக வந்தான். உண்மையை உணர முடியாத படி தடுமாறுகின்றபோது "ஓம்" எனும பிரணவ மந்திரம உச்சரித்து உயர்வு பெற வேணடும் என்பதை உணர்த்துவதற்கே பிரணவஸவரூபனாக விநாயகர் காட்சி தருகிறார். ஓங்காரநாதம் இநதுமத வேதசாரம். பிரணவ மூர்த்தியை முருகன் வழிபட்டு வள்ளி திருமணத்திற்கு உதவ வேண்டுவதாகக் கதை நமககுக் கூறும.

இதன அடிப்படை உணமை யாது? எந்த ஒரு செயலைச செய்ய முற்படும் போது "ஓம்" கார வடிவான விநாயகரை, ஆனைமுகனை வழிபட்டுத் தொடங்க வேண்டும். வினைகளை வேரறுத்து இன்பத்தை அளிக்க வல்ல தெய்வமாக கணநாதன் இருபபதை உணர வேணடும். விநாயகரில் வழிபாடு தொடங்கி அனுமன் விழாவாக நிறைவு செய்ய வேணடும். அனுமன் சிரஞ்சீவி அல்லவா? இதனாலன்றோ, "பிளளையார் பிடித்து குரங்கில் முடித்த" என்ற பழமொழி தோன்றியது. இதுவே பின்னர் மருவி "பிள்ளையாா பிடிக்க குரங்காய் முடிந்தது" என மாறுபட்ட பொருளில் வழங்கலாயிற்று.

விநாயகர் வழிபாடு ஓங்கார வடிவத்தை உள்ளத்தில் உருவகப்படுத்தும். யானை வடிவத்தைக் கண்டஞ்சிய வள்ளி கிழவனை மணத்துகொள்ள ஒப்புதல அளித்து சரணடைகின்ற நிலைபோல ஓங்கார நாதனை வழிபட்டு பிரணவத்துடன்கூடிய நாமாவளிகளை நா இனிக்க, உடலுறுப்புகள் ஒன்றுபட்ட நிலையில் தியானித்துக கூற இறைவன திருவடிகளைப் பற்றிக் கொளள, போற்றிப் பணிந்து புன செய்கைகளைத் துறந்து நன் செய்கைகளைக் கொள்ள அன்பு மனம் நிறைக்கும். பேரின்பப் பெருவாழ்வாம இறையருள் இனிதுறையும.

மனத்தில் ஆன்மா என்ற பெண ஞானப்பெண்ணாக மாறும்போது இதயத்தில் இறை குடியேறி இன்பத்தை இணைக்கும். ஜீவாத்மா என்ற ஞானப்பெண பரமாத்மா என்னும் உண்மை என்னும் ஒளியோடு இணையும்.

ஆன்மாவைத் தூய்மைப்படுத்த விடாது மும்மலங்களும் சிற்றின்பத்தை நாடவைக்கும் வேடர்களாக நமது உறுப்புக்களே உள்ளன. பல்வேறு வடிவங்களாக இறைவன் வேடமிட்டு சோதிக்கலாம். இவற்றிலிருந்து நற்செயல், நற்றொண்டு மூலம், தூய பக்தியின் மூலம். விநாயகர் வழிபாட்டின் மூலம் உயர்வைப் பெற முயற்சி செய்யும்போது, புராண, இதிகாச நன்னெறி நூல்கள் நெறிப்படுத்தும்போது இறைவனுகிய பரமாத்மா ஜீவாத்மாவைத் தேடி வந்துசேரும். பேரின்பம் பெறவைக்கும் நிலையான பேற்றை தந்தருளும்.

இவ்வரிய தத்துவங்களை உணர்ந்து இதை எழுத உதவிய பரமக்குடி புலவர் சொல்லினபச் செல்வமணி மீ. சீனிவாசன் அவர்கட்கு நன்றியினைக் காணிக்கையாக்கி மகிழ்கின்றேன. மேலும் ஆன்மீக அருட் செல்வர்கள் கதை, காவியங்களை விண்டுரைப்பதோடு நில்லாமல் உட்பொருள் உணர்த்தி அறிவியல், வாழ்க்கை நெறிமுறைகட்கு ஆன்மீக வழி முறைகளை விளக்குமாறு பணிவன்புடன் வேண்டுகிறேன்.

முனனோர் வகுத்தளித்த ஆன்மீக நெறியாவும் அறிவியலோடு பின்னிப் பிணைந்த, மக்கள் வாழ்வாங்கு வாழ வழி வகுத்ததென்பதை நாத்திக வாதிகளும் நன்கு கணடுணருமவண்ணம், பேரின்பப் பெருவாழ்வு பெற்றுய்ய எழுததாளர் பெருமக்கள் கைவண்ணத்தில் கலை வண்ணம் காட்டி உதவுமாறு வேணடித் தொழுதும், ஞானப்பெணணாக நம ஆன்மா விளங்கி அருள் ஞானப் பழமான பரமாதமாவுடன் இணைந்து இன்புற இறைவனடி போற்றுவோம்.



# கம்பன்

திரு. க. சுகுமாரன், எம்.ஏ.,
திருவாரூர்

இராமாயணத்தைத் தமிழில் அருமையான செய்யுள் ரூபமாக அமைத்து என்றும அழியாப் புகழை அடைந்த கவிச்சக்கரவர்த்தியான கம்பநாட்டாழ்வாருக்குக் கம்பனென் னும் பெயர் வருவதற்குப் பலர் பல காரணங்கள் கூறுகின்றனர். கம்பங் கொல்லையில் காவல் காத்தமையால் கம்பனென்று பெயர் உண்டாயிற்று என்பார் சிலர். வேறு சிலர், அவர் அரசன் முன்பு கையில் கம்பெடுத்த வண்ணம் நின்ற போது இக்'கம்பனா' என்று அரசன் விளித்தமையால் கம்ப னென்னும் திருநாமம் உண்டாயிற்று என்பர். தமிழ் மொழியில் தேர்ந்த அனைவரும் இவ்விரு காரணத்தையே பெரும்பாலும் கூறுகிறார்கள்.

பழம்பெரும் புலவர் திரு செல்வ கேசவராய முதலியார் அவர்கள் கம் பன் எனும் பெயருககு விளக்கம்கூறும் போது 'கம்பநாட்டாழ்வார் திருவுரு வப் படத்தில் அவர் ஒரு கம்பத்தின் கீழ் நிற்பது போல் காட்டியிருப்பது கம்பன் என்ற பெயருக்கும் 'கம்பம்' என்ற சொல்லுக்கும் உள்ள பொருத் தத்தை உணர்த்தும்' என்று கூறி னார்கள். அடுத்ததாக காலஞ்சென்ற புலவர் பஞ்சாபகேச சர்மா அவர்கள் தமிழிலும் வடமொழியிலும் மிகுநத புலமை வாய்ந்தவர். அவர் கூறிய கருத்து ஏற்புடையதாக உள்ளமை யால் அக்கருத்தினைக் காண்போம்.

கம்பம் என்றால் தூண என்று சாதாரணமாகப பொருள்படும். கம்பன் என்றால் தூணிலிருந்து உண் டானவர் அல்லது தூணில்இருப்பவர், தூணுக்கு உரியவர் என்று பொருள். உலகத்திற்கெல்லாம் க்ஷேமத்தைக் கொடுத்தற் பொருட்டும், உலகத்தை ஹிரண்யனுடைய வன்மையினின்று நீக்குதற்பொருட்டும், குழந்தை பிர ஹ்லாதனைத் துன்பத்தினின்றும் காப்பாற்றவும் ஒரு கம்பத்தினினறுத் தோன்றிய ஸ்ரீமன் நரஸிம்ஹ மூர்த் திக்குக் கம்பன் என்று ஒருவாறுபெயர் கூறலாம்.

இப்பொழுதும் கம்பத்தின் மேல் காலை உதைத்துப் படுத்து கொண் டால் பெரியோர் கூடாது என்று சொலவதற்கும் இதுவே காரணம். பிரஹ்லாதன் 'அந்த நாராயணன் தூணிலும் இருக்கிறார் துருமபிலும் இருக்கிறார்' என்றவுடன் 'எந்தத் தூணைக்காட்டி' இங்கும் அந்தநாரா யணன இருக்கிறானா காட்டு' என்று இரணியன் கேட்பானோ என்று எதிர் பார்த்து ஒவ்வொரு தூணிலேயும் நாராயணன ஆயத்தமாக இருந்தமை யால், கம்பன் எனும்பெயர் நரஸிம்ஹ மூர்த்திக்கு உணடாயிற்று.

சாதாரணமாக வைத்தீஸ்வர சுவாமியை 'வினைதீர்த்தான்' என்று அழைக்கின்றோம். முப்பெருந் தெய் வங்களில் மகா விஷ்ணு 'காத்தல்' தொழிலுக்கு உரியவர்எனபது அனை வரும் அறிந்த ஒன்று. இதனால் மகாவிஷ்ணுவை 'காத்தான்' என்று கிராமங்களில் வழங்குவதைக் காண லாம். பலர் தங்கள் குழந்தைகளுக்கு 'காத்தான்' 'காத்தமுதது' எனும் பெயர்களிட்டு வழங்கி வருவதை இனறும் காணலாம். இது போன்றே கம்பன் எனும் நாஸிம்ஹ மூர்த்தியின் திருநாமததை கவிசசக்கரவர்த்தி யான கம்பன் மாத்திரமே அல்லாமல் அவர் பெரியோருமவகித்து வந்தார் கள். இதனால் இவர்கள் யாவரும் நரஸிம்ஹமூர்த்தியை தங்கள் இஷ்ட தெய்வமாகக் கொண்டு நரஸிம்ம அவதாரத்தை உபாஸிக்கும சிறந்த பக்தர்கள் ஆனார்கள்.

கம்பநாட்டாழ்வாரும் இராமா யணம் பாடிய விஷ்ணு பக்தரே ஆனா லும் அதிலும் சிறந்த நரஸிம்ஹ உபா ஸனையுள்ளவர் என்பது அறிய வேண் டியுள்ளது. இராமாயணத்தைத் தமிழில் பாடும் முன், ஆதியில் வால் மீகி முனிவர் வடமொழியில் பாடிய இராமாயணத்தை ஒட்டி ஆராய்ந்து தமிழில் பாடுகிறேன் என்பர் கம்ப நாட்டாழ்வார்.

வால்மீகி இராமாயணத்தில் காணாத 'ஹிரணய வதைப் படலம்' என்ற விஷயத்தை தன்படைப்பில்விரி வாக எடுத்துரைப்பதை நாம நன்கு உணரலாம்.மேலும் நரஸிம்ஹஅவதா ரத்தினமகிமையை விளக்கசசில செய் யுள்கள் உபமானமாகவும் காணலாம். இது காரணங்களால் கம்பநாட்டாழ் வார் நரஸிம்ஹமூர்த்தியின் சாதா ரணப் பெயராகிய கம்பன என்ப தைக் கொண்டாரெனறும், அவரிடத் தில் விசேஷ பக்தியும் அபிமானமும் உள்ளவரென்பதும் விளங்கக் காண லாம். ஆகையால் கம்பு வைத்திருந் ததினாலும், கம்பங் கொல்லை காத் திருந்ததினாலும், கம்பத் தோர மாய் நின்றமையாலும் அல்லது சபை யினிடத்துள்ளவர்களை இனிமையா கப்பாடி சிரக்கம்பம் செய்வித்ததா லும் கம்பனென்று திருநாமம் உண் டாயிற்று எனபது எவ்வகையிலும் பொருத்தமில்லாததை அறிய முடி கிறது. ஸ்ரீமன் நாராயணன சிறந்த அவதாரமாகிய நரஸிம்ஹ மூர்த்தி யின சிறந்த பக்தனானதால் கம்பன் என்ற பெயர் உணடாயிற்று எனபது இராமாயணத்திலிருந்து மேற்காட் டிய காரணங்களால் பொருநதுகின் றது என்பதை நாம் நன்கு அறிய முடிகிறது.



# விதியும் மதியும்

(சுகி)

விதி என்ற சொல்லுக்கு சட்டம், ஒழுங்குமுறை, அவற்றின உட்பரிவு என்ற பொருளும், சாஸ்திர ரீதியாக ஏற்படுத்தப்பட்டுள்ள ஆசார அனுஷ்டான முறைகள் என்ற பொருளும் உள்ளன. இவைத்தவிர வினைப் பயன, காலகதி, தெய்விகம், மனிதனுடைய செயல்களுக்கு அப்பாற் பட்ட சக்தி முதலிய பொருள்களும் உண்டு.

விதியின் இத்தகைய அம்சங்கள் பலவற்றை வால்மீகி பகவானும், கவி சக்ரவர்த்தியாகியகம்பனும், வியக்கத் தக்க வகையில் பல நிகழ்ச்சிகளில் விளக்கி இருக்கிறார்கள். இது தவிர, விதி மதி ஆகிய இரண்டில் எது அதிக சக்திவாய்ந்ததென்பதையும், விதிக்கு மதி உட்பட்டதா இல்லையா என்பதையும் சில நிகழ்ச்சிகள் மூலம் விளக்கப் பட்டிருக்கின்றன. இவற்றை ஆராய்ந்து அவற்றினசுவையை அனுபவிப்பதே இந்தக் கட்டுரையின் நோக்கமாகும்.

ஸ்ரீராமன், கைகேயியின் சொற் கேட்டு அயோத்தியை விட்டு நீங்க நேர்ந்த சந்தர்ப்பத்தில் விதி விளையாடிய விநோதத்தைக் கம்பரும் வால்மீகியும் அவரவர்க்கே உரித்தான உன்னத வகைகளில் சித்தரித்திருககிறார்கள்.

வால்மீகியின் வரலாற்றின்படி, ஸ்ரீராமன் கைகேயியினிடம் விடை பெற்றுக் கொண்டு கௌஸல்யையின் அரண்மனைக்கு வரும் தருணம் ஆதி முதல் லக்ஷ்மணன் உடன் இருக்க நேரிடுகிறது. எல்லா நிகழ்ச்சிகளையும் மௌனமாகக் கவனித்து வரும் லக்ஷ்மணன் தன்னுடைய துக்கத்தையும் சீற்றத்தையும் அடக்கியபடியே ஸ்ரீராமனைப்பின்தொடர்ந்து வருகிறான். ஸ்ரீராமனின் பட்டாபிஷேகத்தை எதிர்பார்த்து ஆனநதத்தின்உச்சக்கட்டத்திலிருந்த கௌஸல்யைக்கு, ஸ்ரீராமன் வனம் செல்லப் போவதாகவும் தாயாருடைய துக்கத்தைச் சமனம் செய்து விடைபெற வந்துள்ளதாகவும் கூறிய வார்த்தைகள், பேரிடியாகத் தோன்றுகின்றன. உடனே துக்கத்தின் உச்ச கட்டத்தை அடைந்த கௌஸல்யை ஒருவாறு ஸ்ரீராமனுடைய வார்த்தைகளால் தேறி, அவனுக்கு விடை கொடுக்கும் சந்தர்ப்பத்தில், விவேகத்தை ஓரளவு அடைந்து,

" நூனம் து பலவான் லோகே
க்ருதாந்த ஸர்வமாதிசந்
லோகே ராமாபிராமஸ்த்வம் வனம்
யத்ர கமிஷ்யஸி ||

(அயோ-24-5)

'லோகத்திலுள்ள யாவரையும் மகிழ்விக்கும் இராம! நீ காட்டுக்குப் போக வேண்டுமென்பதைப் பார்க்கும் போது, உலகத்தில் விதியே பலமுள்ளதென்பதும்,சுகதுக்கங்களுக்குவிதியின் சக்தியே காரணம் என்பதும் நன்ருக விளங்குகிறது'' என்று கூறி மனமில்லாத போதிலும் விடை கொடுக்கிறாள். ஆனால், கௌஸல்யை இவ்வாறு விடை கொடுப்பதற்கு முன்னம், அவளுடைய சோகத்தைக் கண்ட லக்ஷ்மணனின் சீற்றம் உச்சக் கட்டத்தை அடைந்து வெடிக்கிறது. கைகேயியினுடைய சூழ்ச்சியைச் சாடுகிறான். தசரதனுடைய செய்கை அதர்மமானது என்று படபடப்புடன் கூறி, அந்த அதர்மத்தை மாற்றி ஸ்ரீராம பட்டாபிஷேகததை முடிப்பதாகவும், தந்தையை அதன் நிமித்தம் அழிக்க நேரிடினும் தயாராக உள்ளதாகவும் சூளுரைகளை உரைக கிறான்.

அந்த நிலையில் ஸ்ரீராமன லக்ஷ்மணனை சமாதானப்படுத்த அரும் பாடுபடுகிறான். பிதாவினுடைய கட்டளையை ஏற்றுக் கொள்வதே தன்னுடைய தர்மம் என்று கூறுவதுடன், அன்று வரை தன்னிடம் மிகுந்த அன்பும் பாசமும் வைத்திருநத கைகேயி, திடீரென்று, அவளுடைய அரண்மனையிலுள்ள பணிப்பெண்களுக்கெதிரில் அநாகரீகமான முறையில் தனக்கு இட்ட கட்டளை, தெய்வத்தின் செயலேயாகும் என்கிறான். இநத சந்தர்ப்பத்தில் இராமன் திட்டவட்டமாக,

" அஸங்கல்பிதமேவேஹ யதகஸ்மாத்
ப்ரவர்த்ததே |
நிவர்த்யாரம்ப மாரப்தம் நநு
தைவஸ்யகர்மதத் ||

''இவ்வுலகத்தில், மனத்தால் எண்ணவும் முடியாத ஒரு கார்யம் திடீரென்று நடப்பதும், வெகு முயற்சியுடன் ஏற்பாடு செய்யப்படும் கார்யம் நின்று போவதும் தெய்வத்தின் செயலேயாகுமல்லவா''. (அயோ-22 24) என்றுகூறி தெய்வ பலத்தை மீறும் சக்தி எவனுக்கும் கிடையாது என்று அறுதியிடுகிறார்.

இந்த சமாதானத்தை இலக்ஷ்மணன் சிறிதளவும் ஏற்காமல், எந்தக் காரியத்தையும் முடிப்பதற்குச் சக்தியற்ற கோழையாக இருப்பவனே, தெய்வத்தின்மீது பழியைச் சுமத்தி விடுவானென்று கூறுகிறான். மேலும், அப்படிப்பட்ட தெய்வ சக்தியும் தன் வலிவுக்கு எதிரே ஒன்றும் செய்ய முடியாதென்றும், தெய்வமே எதிரில் வந்தாலும் அதை முறியடித்துக் காரியத்தில் தான வெற்றி காண்பது

த்ரணமென்றும கூறுகிருன். அந்த நிலேயில், ஸ்ரீராமன், தனனுடைய தீர்மானத்தை மாற்றிக் கொள்ளப் போவதிலலேயெனறும் லக்ஷ்மணன் தன்னே மீறுவது தகாதென்றும் கூறி, லக்ஷ்மணனின் கோபததை அடக்கி விடுகிருன்.

இநத நிகழ்ச்சிகள் சம்பநதமான கம்பனின் கவிதையை ஆராய்வோம். ஸ்ரீராமன் கைகேயியைச் சநதிக்கும் போதும், கைகேயி இராமனுக்கு ஆணே யிடும போதும் லக்ஷ்மணன் ஸ்ரீராம னுடன் இல்லே. ஸ்ரீராமன கைகேயி யினுடைய ஆணேயை நிறைவேற்று வதாகக் கூறிவிட்டுக கௌஸல்யை யின் அந்தப்புரத்திற்குத் தனி யாகவே சென்று விவரங்களேக் கூறு கிருன். இந்த நிலேயில், கௌஸல்யை ஸ்ரீராமனே எதிர்பார்த்துக் காத் திருநத விதத்தையும், ஸ்ரீராமன கௌஸல்யையின் அரண்மனேயை அடைந்ததையும் கம்பன்,

'' குழைக்கின்றகவரிஇன்றிக் கொற்றக்
வெண் குடையுமின்றி
இழைக்கின்ற விதிமுன செல்லத்
தர்ம்மபின் இரங்கி ஏக
மழைக்குன்றம் அனேயான் மௌலி
கவித்தனன் வரும் என்றென்று
தழைக்கின்ற உள்ளத் தன்னுள்
முன்ஞெரு தமியன் சென்றுன் ''

என்று உருக்கமாக வர்ணித்துள்ளார். இந்த வர்ணனே கல்நெஞ்சுக்காரனே யும் உருக்குவித்துக் கண் பனிக்கச் செய்யும் என்பதில் சந்தேகமில்லே. கருமேகத்தை நிகர்த்த ஸ்ரீராமன் முடிசூடி வரும் காக்ஷியை மனக் கண்ணே நிறுத்தி அதைக் காணும் ஆவலுடன் கௌஸல்யை காத்திருக் கிருள். அவளுடைய எதிர்பார்ப்புக்கு நேர் மாருக ஸ்ரீராமன் 'இருமருங்கும் சாமரம் வீசப்படாமலும், வெண் கொற்றக் கொடை பிடிக்கப்படாம லும், நன்மை தீமைகளுக்குக் காரண மாகிய ஊழ்வினே முன் செல்ல, அறக் கடவுள் வருந்திப் பின் தொடர்ந்து வர, ஸ்ரீராமன் தன்னந் தனியஞகச் சென்றுன்', என்ற இந்தப் பாடலில் விதியின வலிமையும், அதற்குட்பட்டு, தர்மத்தையே துணேக்கொண்டு செல லும் ஸ்ரீராமனின் தீரத்தையும் வெகு அழகாகக கமபன் சித்தரித்துள்ளார். இங்கு, ''விதி'' என்ற சொல்லுக்குத் தசரதனின் கட்டளேயை மேற் கொண்டு, பிதுர்வாக்ய பரிபாலன மாகிய விதியை (தர்மத்தை) முன னிட்டுக் கொண்டு ஸ்ரீராமன் சென் ருன என்ற மறறெரு பொருளும அடங்கியிருப்பது கமபனின கவிதா சாமர்த்தியத்திற்கு எடுத்துக் காட் டாக அமைந்துள்ளது.

ஸ்ரீராமனுக்குக் கைகேயி இட்ட கட்டளேயை லக்ஷ்மணன, அயோத்தி மக்களேப்போலவே பிறகே அறிகிருன். உடனே பதட்டமடைந்து சீற்றத் துடன வாளே வீசிக் கொண்டு அயோத்யா நகர வீதியில் திரிகிருன. அவன கைகேயியினுடைய செய்கை யைக் கேட்டுக் கைகொட்டி நகைப் பதைக் கம்பன்,

''சிங்கக் குருளேக்கிடு தீஞ்சுவை பூனே
நாயின
வெங்கட் சிறுகுட்டனேயூட்ட விரும்
பினளே
நங்கைக்கறிவின் திறன் நன்றிது
தென்னுக்
கங்கைக்கிறைவன் கடகக்கை புடைத்து
நக்கான்''

என்று விவரிக்கிருர். இவவாறு கைகேயியின் அடாத செய்கையை எள்ளி நகையாடும் லக்ஷ்மணன் தன் வலிமையால் யாவரையும் அடக்கி ஸ்ரீராமனே முடிசூடச் செய்வே னென்றும் அதைப் போக்குவதற்காக மண்ணுட்டவரன்றி, விண்ணுட்டவரும் கூடி எதிர்த்தாலும், பூமியில் பெண் ணுட்டமே இல்லாமற் செய்துவிடு வதாகவும் சூளுரைகளே உரைக் கிருன்.

இலக்குவன் கூச்சலிட்டுக் கொண்டு வீதியில் திரிவதை அறிந்த ஸ்ரீராமன், அவனிடம் வந்து அவனேச் சமா தானப்படுத்தும்போது,

'' நதியின் பிழையன்று நறும்புனலின்
மையற்றே,
பதியின பிழையன்று பயநது நமைப்
புரந்தாள்
மதியின் பிழையனறு மகன் பிழை
யன்றுமைந்த
விதியின் பிழைநீயிதற்கு என்னே
வெகுண்டதென்றுன்''

''பட்டாபிஷேகம் தடைபட்ட தற்குத்தசரதனுவது, கைகேயியாவது, பரதனுவது காரணமில்லே. இது விதி யின செயலாகும். விதியே எனக்கு எதிராகச் சதி செய்யும்போது நீ எதற்குக் கோபிக்கிருய்'' என்று ஸ்ரீ ராமன் கூறுகிருன. இவவார்த்தை களேச சிறிதும் ஏற்காத லக்ஷ்மணன,

'' உதிக்கும் உலேயுள் உறுதீயென
ஊதை பொங்கக்
கொதிக்கும் மனம எங்ஙனம் மாற்று
வென் கோளிழைத்தாள்
மதிக்கும மதியாம்முதல்வான
வர்க்கும் வலியதாம்
விதிக்கும் விதியாகும் என்வில் திறல்
காண்டி என்றுன்''

என்றுகூறி, விதியையும் தன் வில்லின் வலியால் முறியடிப்பதாகச் சபதம் செய்கிருன். அந்த நிலேயில் மற்றும் பல சமாதான வார்த்தைகளேக் கூறும் ஸ்ரீராமன் கடைசியாக ''என் சொற் கடந்தால் உனக்கு யாது ஈனம்'' (என் சொல்லேத் தட்டுவதையும் நீ இழிவாக நினேக்க மாட்டாய் அல் லவா?) என்று நிஷ்டூரமாகக் கூறிய பிறகே லக்ஷ்மணன் பெட்டிப பாம்பு போல அடங்கினன் என்று கம்பன் விவரித்திருக்கிருர்.

ஸ்ரீராமனும் பரதனும் சித்ர கூடத் தில் சந்தித்தபோது பரதன் ஸ்ரீ ராமனே அயோததிக்குத் திரும்பி எழுந்தருளி முடிசூட்டிக் கொள்ளு மாறு பல காரணங்களேக் கூறி வேண்டுகிருன். தசரதர் மனேரதித் திலிருந்த ஸ்ரீராம பட்டாபிஷேகம் நிறைவேருமலே அவர் கால கதியை அடைந்துவிட்டதால் அவருடைய

ஆத்ம சாந்தியை உத்தேசித்து ஸ்ரீராமன் எழுந்தருள வேண்டுமென்று ஓலமிடுகிறான். அப்போது பரதனைச் சமாதானம் செய்யும் வகையில ஸ்ரீராமன் பல ஆறுதல் மொழிகளைக் கூறுகிறான். அவைகள் ஸ்ரீராமகீதை என்று ஆன்றோர் கூறியுள்ளனர். அவற்றின துவக்கத்தில் விதியின் வலிமையை ஸ்ரீராமன் எடுத்துரைககிறான். ஜீவாத்மா எந்த காரியத்திலும் ஸ்வதந்திரனாக ஈடுபட முடியாது என்றும், அவன் விதியின் கைப்பொம்மையாக ஆட்டுவிக்கப்படுகிறுனென்றும் ஆரம்பித்து, தவிர்க்க முடியாத உலக ரீதியைப்பற்றி ஏங்குவது பலனற்றதாகையால், ஒவ்வொரு ஜீவனும் தன்னுடைய ஆத்ம ஸுகத்தைக் கொடுக்கக் கூடிய தர்ம மார்க்கத்தை அனுசரிப்பதே நன்மை பயக்கும் என்றும கூறி முடிக்கிறார்.

விதியின் வலிமையை மிகவும் ஆணித்தரமாகக் கவி சக்ரவர்த்தி எடுத்துக் காட்டியுள்ள ஒரு சம்பவத்தை ஆராய்வோம். இராவணனால் கவர்ந்து செல்லப்பட்ட சீதையைத் தேடிவரும் ஸ்ரீராமன் சடாயு ரத்த வெள்ளத்தில் மூர்ச்சையாக விழுந்து கிடப்பதைக் கண்டு புலம்புகிறான். சடாயு சிறிது மூர்ச்சை தெளிவுற்று ஸ்ரீராமனுக்காக இரங்குகிறான். இளையவன் மூலம் அவர்களுடைய வரலாற்றை அறிந்து கொண்ட சடாயு, ஸ்ரீராமனைத் தேற்றரவு செய்யும் தருணம்,

" அதிசயம்ஒருவரால் அமைக்கலாகுமோ
துதியறு பிறவியின் இன்ப துன்பங்கள்
விதிவயமென்பதை மேற்கொளா
விடின்
மதிவலியால் விதிவெல்லலாகுமோ "

என்றுகூறி, இன்பதுன்பங்கள் விதிக்கு வயப்பட்டவை என்றும், விதியை மதியால் வெல்ல முடியாதென்றும் விளக்குகிறார். இந்த நியதியை வலியுறுத்தும் வகையில் பல உதாரணங்களைக் காட்டுகிறார். படைத்தற்கடவுளான பிரமனின் தலைகளுள் ஒன்றைச் சிவபிரான் கொய்து பிரமன் விசனித்ததும், அவ்வாறு கொய்ததின் பலனைச் சிவன் கபாலத்தை ஏற்றுத் திரிந்ததும் விதியின் வலிமைக்குச் சான்றல்லவா என்கிறார். மேலும் உலகைப் பகலும் இரவும் முறையே ஒளிபெறச் செய்யும் சூரிய சந்திராகளை ராகு கேதுக்கள் அவ்வப்போது விழுங்குவதும், இந்திரன விருத்திராசுரனை வதம் செய்ய ஏற்பட்ட காரணங்களும் விதியின் செயலே ஆகும் என்று உபமானங்களை எடுத்துக் காட்டி ஸ்ரீராமனைச் சமாதானம் செய்கிறார். சடாயு, சீதையை மீட்கும் நிமித்தம் இராவணனுடன் போராடியபோது இராவணனால் வெட்டி வீழ்த்தப்பட்டதை ஸ்ரீராமன சடாயுவின் வாய்மொழி மூலம் அறிந்ததும் அந்த சமயத்தில அவருக்குத் துணையாக வரத் தவறிய தேவர்களை உடனே அழிக்கப்போவதாகக ஸ்ரீராமன வெகுண்டு எழுகிறான். அப்போது சடாயு தேவர்கள் யாவரும் தங்களுடைய தீவினைக் காரணமாக இராவணனுக்கு அடிமைப்பட்டு பயந்து இருப்பவர்களல்லவா நல்வினைப் பயனாக ஒரு சமயம் அவர்கள் அமிர்தத்தை உண்டதாலல்லவா உயிர் வாழ்கிறார்கள். ஆகவே அவர்களால்இராவணனை எவ்வாறு எதிர்க்க முடியும் என்றுகூறி இவை யாவற்றிற்கும் மூல காரணம் ஸ்ரீராமன் இலக்குவன் மொழியைக் கேளாமல, பெண்ணின் வார்த்தையை ஏற்று, விதி வயப்பட்டு, மானைத் தொடர்ந்ததால் வந்த விளைவேயாகும், என்று முடித்து ஸ்ரீராமனைச் சடாயு தேற்றுகிறார். என்னே, கம்பனின் கற்பனா சாமர்த்தியம் என்பது மட்டிலன்றி, விதியின் வலிமையை இதைவிட வெகு அழகாக யாரால் எடுத்துரைக்க முடியும் என்பதே சிந்தனைக்குரியதாகும்.

கபந்தனைச் சந்திகக நேரிட்டபோது ஸ்ரீராமலக்ஷ்மணர்களின் உரையாடலில் விதியின் வலிமையையும் அதை மதியால் வெல்ல முயலுவதின் மடமையையும் வால்மீகி அழகாகச் சித்தரித்துள்ளார். கபந்தனின் கைக்குள் சிக்கிக் கொண்ட தருணம் லக்ஷ்மணன் மிகவும் பாதைப்பட்டு, விடுவித்துக் கொள்ள முடியாமல் உயிரை இழந்து விடும் நிலையை அடைகிறான். அப்போது ஸ்ரீராமனைப் பார்த்து, தான் இறந்து விடுவது திண்ணம் என்றும், ஸ்ரீராமன் தன்னுடைய வலிமையினால் எவ்விதமாவது தப்பிவிட முடியுமென்றும், சீதையைக் கண்டு பிடித்து, வனவாசத்தை முடித்து விட்டுஅயோத்தி சென்றுமுடி சூட்டிக கொள்வானென்றும், அந்த வேளையில் லக்ஷ்மணனை மறவாதிருக்கும் படியும வேண்டுகிறான்.

லக்ஷ்மணனின் துயரத்தைப் போக்கித் தைர்யத்தை ஊட்ட ஆரம்பித்துச் சொல்லும்போது, "நமக்கு ஆபத்துக்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வருவதைப் பார்த்தால் விதியின் வலிமை மிகுந்தது என்பது நன்றாகத் தெரிகிறது. ஆகவே,

" சூராச்ச பலவந்தசச கருதாஸ்த்ராஸச
ரணாஜிரே |
காலாபி பன்னாஸீதந்தியதாவாலுக
ஸேதவ: ||

ஒருவன் சூரனாகவும் பலவானாகவும் யுத்த ரங்கத்தில் அஸ்தர வித்தைகள் பலவற்றைச் செய்பவனாயினும் கூட, விதிக்கு வயப்பட்டவனானால், விதியை வெல்ல முயற்சிப்பது, வெள்ளம் வருவதைத் தடுப்பதற்காக ஒருமணலைப் போடுவதற்குச் சமானமேயாகும்." என்று கூறுகிறான.

இராவணனுடைய மனத்தை மாற்றிச் சீதையை இராமனிடம் சமர்ப்பித்து விட்டு மேன்மையை அடைவதே சிறந்த முறை என்று விபீஷணன் இராவணனுக்குப் பல உபதேசங்களைச் செய்கிறான். அவை யாவும் பயனற்றுப்போய் விபீஷணனை இராவணன் சபையிலிருந்து வெளியேறும்படி சீறும் சமயம், விபீஷணன் விதியின் வலிமையையும் மதியால் அதை வெல்ல முடியாதென்பதையும், மேலே கூறிய ஸ்லோக மொழிகளைக் கொண்டே உணர்த்துகிறான். ஆனால் இதே விபீஷணன், இராவணனுடைய சபையில் ஆஞ்சநேயர் இராவணனுக்கு அறிவுரைகளை உரைத்ததைக் கேட்டு அவரை வதம் செய்யும்படி இராவணன உத்திரவிட்டதைக்கண்டுவிபீஷணன அவருடைய உயிரைக் காப்பாற்றும நிமித்தம பல காரணங்களைக் கூறியும் இராவணன் இசையவில்லை. கடைசியாக விபீஷணன் (தன்னுடைய மதியை உபயோகித்து) அனுமனை வதம் செய்து விட்டால், சீதையின் இருப்பிடத்தை அறிந்துஸ்ரீராமனுக்குச் சொல்வதற்கு வேறு யாரும் இல்லாததால் இராமன் இராவணனுடன் போர் செய்வதற்காக இலங்கைக்கு வர வழி கிடையாதென்றும், இராமனை வென்ற பிறகல்லவோ இராவணன் சீதையுடன் உல்லாசமாக வாழ முடியுமென்றும்

## தி. தி. தேவஸ்தானத்தாரின்

# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம்
5-30 „ 6-00 „ —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 „ 6-30 „ —சுத்தி—முதல்மணி
6-30 „ 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 „ 12-30 „ —சுத்தி, 2-வது மணி
12-00 „ 6-00 மாலை —ஸர்வதரிசனம்
6-00 „ 6-30 „ —சுத்தி, 3-வது மணி
6-30 „ 9-15 இரவு —ஸர்வதரிசனம்
9-15 „ 9-30 „ —சுத்தி, ஏகாந்தசேவை

காலை

## வெள்ளிக்கிழமைகளில்

9-00 „ 10-00 „ —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 „ 10-00 „ —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு)

## ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | „ | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | „ | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | „ | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | „ | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | „ | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப் படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | „ | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | „ | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | „ | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

கூறி, ஆகவே அனுமனுக்கு அங்க பங்கம் செய்து அனுப்பி விடுவதே இராவணன் சீதையுடன் நிம்மதியாக இருப்பதற்குத் தகுந்த உபாயமென்றும் எடுத்துக் காட்டுகிறான். இந்த உபதேசத்தை இராவணன் ஆமோதித்து, அனுமனின் வாலுக்குத் தீ வைக்கச் செய்கிறான். இந்த நிகழ்ச்சியை நோக்கும்போது, விதியை மதி வெல்லும் என்று தோன்றினாலும், அனுமன் இலங்கையிலிருந்து சென்று ஸ்ரீராமனுக்குச் சீதை இருப்பிடத்தை அறிவித்து, ஸ்ரீராமன் வானர சைன்யங்களுடன் இலங்கைக்கு வந்து போரிட்டுப் புத்ர பௌத்ர பந்துக்களுடன் இராவணன் அழிய வேண்டுமென்று விதியிருந்ததால்தான் இராவணன் மதி மயங்கி விபீஷணனின் வார்த்தைகளை ஆமோதித்துச் செயல்பட்டானென்பது விளங்குகிறது. அவ்வாறு இல்லாவிட்டால், அனுமன் இலங்கையிலிருந்து மீண்டு சென்றிருக்க முடியாதென்பதையும், பின்னிட்ட விளைவுகள் நேராதிருக்கலாம் என்பதையும், இந்திரஜித்து இராவணனிடம், நிஷ்டூரமாக, அதிகாயன் வதத்திற்குப் பிறகு கூறியதாகக் கம்பன் வெகு அழகாகச் சித்தரித்துள்ளார்.

" அக்கப் பெயரோனை நிலத்துடன்
அரைத்துளானை
விக்கற்பொரு தூதனென்று விளம்பி
விட்டாய்
புக்கத்தலை யெய்த நினைந்திலை
புத்தியில்லாய்
மக்கள் துணையற்றனையிற்றது
உன் வாழ்க்கைமன்றோ"

"அக்ஷயகுமாரனைத் தரையில் தேய்த்து அழித்தவனை நான் பிரம்மாத்திரத்தால் கட்டிக் கொணர்ந்து உன்னெதிரில் நிறுத்தியபோது (விபீஷணன் உபதேசித்தபடி உகந்து) எதிரியின் வரலாற்றைக் கூறிய தூதனென்று விட்டு விட்டாய். அவன் இலங்கையை அழித்திய விவரங்களை எதிரிக்கு அறிவிக்கக் கூடிய 'ஒற்றனெ'ன்று அவனை வதைக்கத் தவறினாய் புத்தியை இழந்து அப்போது செய்த உன் குற்றத்தால் மற்ற குமாரர்களை இழந்தனை: உன் வாழ்க்கையும் குறைந்தது" என்னும் வார்த்தைகள், விதி வலிது என்பது மட்டிலன்றி மதியை இழக்கவும் செய்யும் என்பதும் தேறுகிறது.



# கம்பன் காவியத்தில் சபரி மோக்ஷம்

சபரி ஒரு வேடமாது. ஒரு சமயம் அவள் மதங்கமுனிவர் ஆசிரமத்திற்க ருகில் வரும்பொழுது அவர் தனசீடர் களுக்குச் செய்த உபதேச மொழிகள அவள் காதில் விழுந்தன. அஹிம்சை, இறைவன் எல்லாப் பொருள்களிலும் கரந்துறைதல், மனிதப் பிறவியின் சிறப்பும் கடமையும் பற்றியவை அவை.

சபரியின் உள்ளம் தூய்மை பெற் றது. பழுதே கழிந்தனவே நாட்கள் என வருந்தினுள். வேடுவப் பிறப் பால் வந்த கொடுந்தொழிலே உதறித் தள்ளினுள்; தவக்கோலம் பூண்டாள். மதங்க முனிவரின் சிஷ்யையாக விரும் பினுள். "முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவது போலா குமோ தன் முயற்சி" என ஐயுற்ருள்.

தவச் சிரேஷ்டரை அணுக அஞ்சி னுள். ஆச்ரமத்தின் புறத்தே சிறு தொண்டுகள் செய்து வரலானுள். தவசியர் செல்லும் பாதைகளேச் செப் பனிட்டுப் பெருக்கல், மலர் பறித் தல், கனிச் செடிகள் வைத்துத் தண ணீர் ஊற்றி பராமரித்தல் போன் றவை அத்தொண்டுகளில் சில. நாளா வட்டத்தில்இத்தொண்டுகளே மதங்க முனிவரைக் கவர்ந்தன.

சபரியின் அகப்புறத் தூய்மையை யும் தொண்டுள்ளத்தையும் உணர்ந்த முனிவர் அவளேத் தம் சீடர்களில் ஒருவராக ஏற்றுக் கொண்டார் அன்று முதல் அவள் உள்ளம் தூய் மையும் பக்குவமும் அடைய ஆரம் பித்தது.

மதங்க முனிவர் முக்காலமும் உண ரும் ஆற்றல் மிகுந்தவர். சபரியின் எதிர்காலமுணர்ந்த அவர் அவளே அதற்குப் பக்குவப்படுத்தினுர். "இராம நாம" தாரக மந்திரத்தை அவளுக்கு நன்கு உபதேசித்தார். இராமபிரானுலேயே அவளுக்கு மோக்ஷம் சித்திக்கும் என்பதையும் எளிதில் உணர்த்தினுர். பிறகு அவர் பிறவி நீத்தார்.

சபரி இராமபிரான் வரவை எதிர் நோக்கித் தவங்கிடந்தாள். இராம நாம உச்சாடனம் செய்து கொண்டே மதங்கர் சொல்லிய எம்பெருமான் உருவத்தை மனக்கண்முன் நிறுத்தி, புளகாங்கித மடைவாள். தான் உண்ட காய்கனிகளில் சுவைத்து இனி யவை எனக் கண்டவற்றை இராம பிரானுக்குப் படைக்க எண்ணி சேக ரித்து வைத்தாள். அவள் தவ வலிமையால் அவை கெடாமலிருந் தன. ஆண்டுகள் பல சென்றன.

அவதாரமூர்த்தி இராமன் பிதுர் வாக்கிய பரிபாலனத்திற்காக சிற் றன்னே கைகேயி ஏவிய வண்ணம் முடி துறந்து மரவுரிதரித்து, கைவில் ஏந்தி, தவக்கோலம் பூண்டு இளவல் இலக்கு வனுடனும் இனியவள் சீதையுடனும் ஆரண்யம் புகுந்து பல இன்னல் களுக்கு உள்ளானுன். சீதையை இராவணன் தூக்கிச் செல்ல, இராமன் அவளே இழந்தான். இலக் குவனுடன் அவளேத்தேடி அலேந்தான்.

சீதையை சிறை செய்து தேரில் கொண்டு சென்ற இலங்காதிபனுடன் பொருது, குற்றுயிரும் குலேயுயிரு மாய் இருந்த ஜடாயு உயிர் துறக்க, விவரமறிந்து அப்புள்ளரசனுக்குச் செய்யவேண்டிய ஈமக் கடன்களேச் செய்து இடைமறித்த அயோமுகியின காதையும், மூக்கையும் இலக்குவன் அறுத்துத் துரத்தி, பின் இருவரும் பயணத்தைத் தொடர்ந்தனர்.

அரக்கன் கவந்தன் வழி மறித் தான். அவன் தோள்களே வெட்டி வீழ்த்த இராமனின் கை அவன்மீது பட்டதும் அவன் அரக்க உரு மறைந் தது. கந்தர்வ உரு அடைந்தான். தன் விவரம் சொல்லி இராமனே வணங்கி, அணமையில் வதியும் தாயி னும் மிக்க அன்புடைய சபரி என்ற தவ மாதை அணுகி அவள் சொற்படி "இருசியமுக பர்வதம்" அடைந்து சுக்ரீவன் என்னும் வானரத் தலே வனின் துணே கொண்டு தேவி சீதை யைத் தேடும்படி வேண்டி வான வெளியில் மறைந்தான்.

இராம இலக்குவர்கள் கவந்தனின் யோசனேயை ஏற்றுக்காடு மலேகளேக் கடந்து மதங்க முனிவரின் ஆச்ரமம் அடைந்தனர். இவை எல்லாம் அவ தாரமூர்த்தி இராமனின் மாயா லீலே கள் அல்லவா? யாருக்காக இத்தனே ஆண்டுகள் காத்திருந்தாளோ அந்த நீலமேகச் சியாமளமூர்த்தி, கால்மண் தோய வரிவில் ஏந்தி தன் ஆச்ரமம் நோக்கி வருவதைக் கண்ணுற்ருள் சபரி.

திரு. V. S. சீனிவாசன்,
தஞ்சாவூர்

தன்னே மறந்தாள்; ஆனந்தக் கண் ணீர் பெருக்கினுள். அன்புக் கண்ணீ ரால் அவன் பாதம் கழுவினுள். 'யான் செய்த தவத்தின் பயன் இன்றே கைவரப பெற்றேன்; பிறவித் துன்பம் மாய்ந்தது" என்ன, 'முன் இவற்றுக்கு இது என்று எண்ணலாவதோர் மூல மில்லா' இராமபிரான் "தீதின்றி இருந்தனே போலும்!" என அவளேக் குசலம் வினவினுன்.

சபரிமகிழ்ந்தாள். தாயினும் சாலப் பரிந்தூட்டும் பண்பினளான சபரி, தான்அதுகாறும் சுவைத்துத்தேர்த்து சேர்ந்து வைத்திருந்த பழங்களேக் கொணர்ந்து விருந்து செய்தாள். ஏழை ஏதலன்கீழ் மகன் என்னுது

# பரமபதம்

முன்னுரை :

பரம பதததில் வீறறிருக்கும் ஸ்ரீமந் நாராயணனின் நிலையைப் பறறி இககட்டுரையில் நாம சிறிது ஆராயவோமாக.

பரம்—பரமபததகில இருககும் பரவாசுதேவரின நிலை பரம. இவ் வுலகைக் காடடிலும் மூனறு மடஙகு பெரியது பரமபதம. ஆதலால் அது திரிபாத வீபூதி எனப்படும திரிபாதம் என்பது முக்கால் எனப் பொருள் படும் (மூன்று கால்). பரமபதம முக்கால பங்கு. உலகம் கால் பங்கு.

பரம பதத்தில ஸ்ரீவைகுந்த நகரம உணடு. அங்கு குமுதன், குமு தாட்சன, புண்டரீகன, வாமனன, சஙகு கர்ணன், சர்வநேததிரன, சுமுகன் சுப்பிரதிஷ்டிதன் முதலானவாகள நகர காவலர்களாக இருப்பர். அங்குள்ள திருமாமணி மணடபததில சணடன, பிரசணடன், பத்திரன், சுபத்திரன், ஜயன், விஜயன், தாதா, விதாதா முதலான வாயில் காவலர்களும் இருப்பர்.

அந்தத திருமாமணி மணடபததில் தர்மம, அதர்மம, ஞானம், அஞ்ஞானம, வைராகயம, அவைராக்கியம, ஐசுவரியம், அநைசுவரியம முதலான எட்டுக் காலகளையுடைய சீரிய சிஙகாசனத்திலே ஆதிசேஷனா கிய அணையில் இறைவன் ஸ்ரீமந் நாராயணன கொலு வீற்றிருப்பான.

ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி எனனும முத்தேவியர் உண்டு. பக வான் திவய மங்கள சொரூபம உடையவன. அவனுககு நானகு கரங்கள். அக்கரங்களில் சங்கு, சக்கரம, கதை, வாள், வில் ஆகிய ஐமபடைகள் விளங்கியிருக்கும். கிரீடம, மகுடம், தோள்வளை முதலிய அணிகலன்கள் அவன் திருமேனியில் அழகு பெறும. அவன திரு அரையில் அரை நாணும் பொன்னாடையும பொலிவு பெறும்.

அநதப் பரம் என்ற நிலையிலுள்ள வாசுதேவன் நித்ய வீபூதி, லீலா விபூதி, என்னும இரண்டு உலகங்களுக்கும ஆதாரமானவன். எல்லா வேதங்களும அவன் புகழையே முழங்குகின்றன. அவன் பேரொளியானவன். அநதப்பேரொளியின் முன்னே நித்தர், முக்தர்களின் திருமேனியொளி, சூரி யன் முன் மின்மினி போல ஒளி குறைநது தோன்றும். அவன் தாழ்வுகள் அனைத்துக்கும் எதிர்ததட்டான உயர்வுகள் அனைத்தும் உடையவன். மங்கள குணங்களுககுக் கடல் போனறவன். கருடன் அநநதன், சேனை முதலியார் முதலிய நிதய சூரிகள் சாமகானம பாடி அவனை இன்புறுத்து வர். இதைப் பாட்டுக்கேட்கும் இடம் எனறும் கூறுவர்.

நாராயணன், பரப்பிரமமம, வாசுதேவன, பரஞ்சோதி, பரமாத்மா, பரதத்துவம் முதலிய பெயாகளும் அவனுக்கு உணடு.

முடிவுரை :

ஆழ்வார்களால் பாடப் பெற்ற பரமபதத்தின் பெருமைஉணர்ந்து, அங்குச் செல்லுமுன், இகத்தில் நம்மை உயர்த்திக்கொள்வோமாக !

—எஸ். கோவிந்தராஜன்-மதுரை.

அருள் சுரந்தான் அமலன். அது போது, ஈசனும், பிரம்மனும், தேவேந் திரனும் தன்னை 'அனுகி இராமபிரா னுக்கு வேண்டிய உபசாரங்களையும் பூசனைகளையும் செய்து முக்தி அடை வாயாக' என வாழ்த்திச் சென்ற தைப் பணிவுடன் விண்ணப்பித்தாள் சபரி.

விருந்தோம்பி தங்கள் உடல் தளர்ச்சியையும் இனிய மொழிகளால் தங்கள் உள்ளத் தளர்ச்சியையும் போக்கிய சபரியை 'அம்மையே!' என விளித்து, "வருந்துயர் தீர்த்தாய் அம் மனை வாழி!" என வாழ்த்தினர்.

பின்னர் சபரி அவர்களுக்கு "இரு சிய முகப்பர்வதத்திற்குச் செல்லும் நெறியெலாம் நினைந்து சொன்னாள். தாசரதியும் அன்புடன் கேட்டனன். "கேள்வியால் செவிகள் முற்றும் தோய்வர் உணர்வின் உண்ணும அமுதத்தின் சுவையாய் நின்றான்" இராகவன்.

அருந்தவத்தரசி சபரி தன் தவ வலிமையால் பூதவுடல் துறந்து முத்தி பெற்றனள். அன்னது கண்ட வீரர் அதிசயித்துப் பொன்னடி கழல் கள் ஆர்ப்ப சபரி புகன்ற மாநெறி யில் போனர்.

இவ்விதம் சபரி இராமஇலக்குவற்கு விருந்தோமபி சுக்ரீவ நட்பிற்கு வழி கோலிய வகையால் இராம காரியத் திற்குப் பெரிதும் உதவினளன்றோ!

சபரி வேடமாதாயினும் சத்சங்கத் தால் தூய்மை பெற்றாள். இராம நாமம் அவளுக்கு மதங்க முனிவருக் கும்கிட்டாத எம்பெருமான் தரிசனத் தைக் கிடைக்கச்செய்தது. பிறவிப் பெருங்கடல நீநதி முத்திபெறும் வாய்ப்பளித்தது. இறைவன் தானே வலியவந்து அவளுக்கு வீடு தந்தான்.

இவள் வாழ்க்கை நமக்கோர் படிப் பினை! "திருக்கோளூர் இரகசியம்" என்னும் பொன்மொழிகளில் சபரி யின் செயல் "இனியதொன்று வைத் தேனோ சவரியைப் போலே!" என வியந்து பாராட்டப்படுகிறது.

# கெடில நதிக் கரையினிலே...

எனது பள்ளி பருவம் அது. சேலம்—சென்னை எழும்பூர், சேலம்—கடலூர் செல்லும இரயில் வண்டிகள் செல்லும் பாதையில் எனது பள்ளி அமைந்திருந்தது. இரயில் வண்டிப் பெட்டிகளில் சென்னை, விருத்தாசலம், திருப்பாப்புலியூர் என்னும் பெயர்கள் காணப்படும்.

இரயில் பெ டியில் காணப்பட்ட திருப்பாப்புலியூர்தான் திருப்பாதிரிப் புலியூர் என்பதை நான் இலக்கியமும் வரலாறும் படித்தகாலத்தில் தெரிந்து கொண்டேன்.

தேவாரம் பாடிய மூவருள் முதலாவதாக வைத்து எண்ணப்படும திருநாவுக்கரசர் வாழ்ந்த இடம் கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் பாடலிபுத்திரம் என்னும் பெயரில் அந்த வட்டாரத்தில் சமணர்களின் கல்லூரி இருந்தது. அங்கு நாவுக்கரசர் ‘தருமசேனர்’ என்னும் பெயரில சமணத்தலைவரா யிருந்தார். இவைபோன்ற பல எண்ணற்ற சிறப்பம்சங்கள் திருப்பாதிரிப் புலியூருக்கு உண்டு.

கடலூரின் இடையே ஓடி வங்கக் கடலில் சங்கமிக்கும் கெடில நதியின் கரையில் அமைந்துள்ள திருவயிந்திரபுரம், திருவதிகை வீரட்டானம் ஆகிய தலங்களுக்குப் பயணம் மேற்கொண்ட நான் திருப்பாதிரிப புலியூருக்கும் புறப்பட்டேன்.

தமிழகத்தின் முக்கியமான நகரங்களுள் கடலூரும் ஒன்று. தென்னார்க்காடு மாவட்டத்தின தலைநகரம். தமிழகத்தின் எந்த ஊரிலிருநதும் கடலூருக்குப் பேருந்து வசதியும், இரயில் வசதியும் உண்டு.

கடலூர் பேருந்துநிலையத்திலிருந்து மேற்கே செல்லும் சாலையில் சிறிது தூரம் சென்று இரயில்வே கேட்டைக கடந்தால் வலதுகைப் பக்கம் ‘திருப பாதிரிப்புலியூர்’ இரயில் நிலையம உள்ளது.

அந்த இரயில் நிலையத்தின் பெயாப் பலகையைத்தான் எனது கண்கள் ஆவலுடன் தேடின. காரணம் இரயில் பெட்டியில் ‘திருப்பாதிரிப் பூலியூா’ என்பதை ‘திருப்பாப்புலியூர்’ என்று கொச்சையாக எழுதப்பட்டிருந்ததே. பெயர்ப் பலகையில் எப்படி எழுதப்பட்டிருக்கிறது என னும் ஆவல் எனக்கு.

நல்லவேளை தமிழ் பிழைத்தது. மஞ்சள் நிறப் பலகையில் ‘திருப்பாதிரிப்புலியூர்’ என்னும் பெயர் கறுப்பு நிற எழுத்துகளால் எழுதப்பட்டிருந்தது. இரயில் நிலையத்தின் முன் சிறிது தூரம் வடக்கு நோக்கி நடக்கிறோம். அங்கிருந்து மேற்குப் பக்கம் ஒரு பாதை செல்லுகிறது. இரண்டு பர்லாங் தூரத்தில் திரிப்பாதிரிப்புலியூர் பாடலீசுவரர்க்கோயில் கோபுரம் கண்களில் படுகிறது. இது குறுக்குப் பாதை. நேர்வழியே செல்பவர்கள் கடைவீதி வழியாகவும் சுற்றி வளைத்துக் கொண்டு மேற்குறிப்பிட்ட பாதையை அடையலாம்.

கோயிலின் கோபுரம் ஐந்து நிலைகளுடன் ஏழு கலசங்களுடனும் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இதற்கு இடப்பக்கம் இருப்பது ‘சிவகர தீர்ததம்’ எனுமகுளம் சிறந்த படிக்கட்டு அமைப்புடன் இப்புனித நீர்க்குளம் காணப்படுகிறது. மாணிக்க வாசகர் இத்தலத்திற்கு வருகை தந்த போது சிவபெருமான் நிலத்திலே தனது கரங்களை வைத்துப் புனித நீரை உண்டாக்கினாராம். அது சிவபெருமானுடைய கரங்கள் பட்ட காரணத்தால் அதற்குச் சிவகர தீர்த்தம் என்னும் பெயர் ஏற்பட்டது. சிவபெருமான் தனது தலையில் தாங்கியுள்ள கங்கை ஆற்றிலிருந்து ஒரு சிறு துளியை அக்குளத்தில் கலந்தார். ஆகவே இக்குளத்தில் குளித்தால் கங்கையில் நீராடியதறகுச் சமம் எனும் நம்பிக்கை பக்தர்களிடையேயே நிலவி வருகிறது. இது அப்பகுதி மக்களிடம் இன்றும் நிலவி வரும் நம்பிக்கை.

---

திரு. பா. அன்பரசு,
சேலம்.

---

ஒரு சமயம் இத்தலத்தில் பாதிரி மரங்கள் நிறைந்து காடாக இருந்தது. புலிக்கால் முனிவர் (வியாக்ரபாதர்) தவம்செய்த இடம். ஆகவே பாதிரி + புலியூர் = பாதிரிப்புலியூர் என்னும் காரணப்பெயர் இவ்வூருக்கு ஏற்பட்டது. கைலாய மலையில் சிவபெருமான் தியானத்திலிருந்தபோது பார்வதி விளையாட்டாக அவரது கண்களைத் தனது கைகளால் மூடினாள். இதனால் உலகமும் மற்ற அண்டங்களும்செயல் இழந்துவிட்டன. இதன் காரணமாகச்சிவபெருமான் பார்வதியைப் பூவுலகத்திற்குச் சென்று பிறக்கச் சாபமிட்டார்.

பாதிரிக்காட்டிற்கு வந்து ஒரு பாதிரி மரத்தின் கீழ் இருந்த சிவலிங்கத்தை வணங்கி உருவமற்ற அருவமாக இருந்து உமை கடுந்தவம் இருந்தாள்.

தவம் மேற்கொள்வதற்கு முன்பு விநாயகருக்குப் பூசை செய்யாமல் தன் தவத்தைத் தொடங்கினாள் உமா. ஆகவே விநாயகர் உமையின தவத்திற்கு இடையூறு செய்யும் எண்ணத்துடன் மரத்திற்கு மறைவில் நின்றிருந்தாராம். ஆகவே விநாயகருக்கு

வடிவம் இல்லாமல் மரத்துடன் இருப்பதாக ஒரு நம்பிக்கை தனது தவத்தை வெற்றிகரமாக முடித்த உமை சிவபெருமானின் உடம்பில் இடப்பாகத்தைப் பெற்ருள்.

இதன் காரணமாக இத்தலத்தில் உள்ள இறைவிக்கு அருந்தவநாயகி என்பது பெயர். பெரியநாயகி, பிருகந்நாயகி என்னும் பெயர்களும உள்ளன.

மங்கண முனிவர் என்பவர் தவ வலிமை பெற்றவர். இறைவனே வழிபடுவதற்காகச் சோலையில் மலர் பறிக்கிருர். அப்போது அங்கிருந்த முள் ஒன்று அவரது காலில் குத்திவிடுகிறது. முள் குத்திய பகுதியில் இரத்தம் வருவதற்குப் பதிலாக நீர் வழிகிறது. மங்கண முனிவருக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. ஆனந்தத்தால் துள்ளிக் குதிக்கிருர். அப்போது அவரதுகால் பக்கத்தில் தவம் செய்து கொண்டிருந்த தூமப்பர் என்னும் முனிவரின் தலைமேல் பட்டுவிடுகிறது. கோபம் அடைகிருர் தூமப்பர். தன்னைக் காலால் உதைத்துத் தவத்தைக் கெடுத்த மங்கணர் கால் முடமான முயலாகப் போகக் கடவார் என்று சாபமிடுகிருர்.

பாதிரிப்புலியூர் பாதிரி மரத்தின் அடிப்பகுதி தனது உடம்பில் உராயப் பெற்றவுடன் முயல் உடல் நீங்கி மனித உருவம் பெறுகிருர் மங்கண முனிவர். இதேபோல் வேறு ஒரு முயல் கதையும் வழங்கி வருகிறது.

புலிக்கால் முனிவராகிய வியாக்ர பாதரின் மகன் உபமன்யு முனிவர். இவர் ஒருநாள் பூசை செய்யும்போது இவரது கால் உமையம்மை உடம்பின் மீது பட்டுவிட்டது. இதனுல் கோபம் கொண்ட உமை உபமன்யு முயலாகட்டும் என்று சாபமிட்டாள். பாதிரி மரக்கிளை உடம்பில் பட்டதால் முயல் வடிவம் நீங்கி மனித வடிவம் பெற்ருர் உபமன்யு.

மங்கண முனிவர் சாபம் பெற்ற புராணச் செய்தியை,

"முன்னம் நின்ற முடக்கால் முயற்கு
அருள் செய்து நீள்
புன்னை நின்று கமழ்பாதிரிப் புலி
யூர்"

என்று சம்பந்தர் தமதுதேவாரப்பாடலில் குறிப்பிட்டுள்ளார். முடக்கால் முயல் என்று குறிப்பிடப்பட்டுள்ள காரணத்தால், மங்கணர் முயலாகப் போவதில்லாமல் காலும் முடமாகச் சாபம் பெற்ருர் என்று அறியலாம்.

இத்தலத்தில்இந்திராணி, கவ்மாரி, வைஷ்ணவி, மகேஸ்வரி, பிராஹ்மி, வாராஹி, சாமுண்டி ஆகிய ஏழு கன்னியரும் வாசம் செய்தார்களாம்.

மேற்கூறியவை அனைத்தும் இப்பகுதியில் வழங்கிவரும் புராணச் செய்திகள். இத்தலத்தில் கோயில் கொண்டுள்ள இறைவருக்குத் தோன்



முன் கோபுரத்தின் நேர்த்தோற்றம் திருப்பாதிரிப்புலியூர்.

ருத் துணை நாகர் மற்றும் பாடலீசு வரர் என்றும், அம்மைக்கு பெரிய நாயகி, தோகைநாயகி, அருந்தவ மியற்றிச் சிவபெருமானின் அருளைப் பெற்றதால் அருந்தவநாயகி ஆகிய பெயர்கள் வழங்கப்படுகின்றன.

இக்கோயிலின் மேற்கிலும், வடக் கிலும், கிழக்கிலும் கெடிலம்ஆறு ஒரு காலத்தில்நீர் நிறைந்து ஓடிக்கொண் டிருந்தது. இன்று மணல்வெளியாகக் காட்சி தருகிறது.

மாணிக்கவாசகர் இங்கு வருகை தந்தபோது கெடிலம் கோயிலுக்குத் தெற்கில் ஓடிக்கொண்டிருந்தது. வெள்ளம் கரைபுரண்டு ஓடவே மாணிக்கவாசகர் தென்கரையிலேயே மூன்று நாட்கள் உணவும் உறக்கமும் இல்லாமல் காத்திருந்தாராம்.

அப்போது சிவபெருமான் ஒரு சித்தர் வடிவம் தாங்கி வந்து கெடி லத்தைக் கோயிலுக்கு வடதிசையில் செல்லும்படி ஆணையிட கெடிலம் நதி யும் அவ்வாறே திசைமாறியதாம். இச்செய்தியை,

"அன்னராம் இரு முனிவரர்க்கு
அபயம ஈந்து அப்பால்
மன்னும் திம்புனல் வடதிசை மரு
விடப் புரிந்து
முன்னம் ஏகிப் பின்வர அருள்
செய்தனர் முனியைப்
பன்னு சித்தர்பின் மாணிக்க
வாசகர் படர்ந்தார்"

என்னும் திருப்பாதிரிப்புலியூர்ப் புராணப் பாடல கூறுகிறது. மேலும் பல்வேறு இலக்கிய, வரலாற்றுச் சான் றுகளைக் காட்டிக் கெடிலத்தின் திசை மாறியது என்று தமது 'கெடிலக் கரை நாகரீகம்' என்னும் நூலில் (பக்கம் 43—76) திரு சுந்தரசண்முக னர் சான்று காட்டியுள்ளார்.

பாதிரி என்னும் சொல் வட மொழியில் பாடலி என்று ஆகும். திருப்பாதிரிப்புலியூருக்கு அருகில் இருந்த பாடலிபுத்திரம் என்னும் நகரில் சமணப்பள்ளி ஒன்றினை நிறு


சிவகர தீர்த்தம் - திருப்பாதிரிப்புலியூர்.

வினர்கள். சில ஆய்வாளர்கள் திருப் பாதிரிப்புலியூரும், பாடலிபுத்திரமும் ஒன்று என்று கூறி வருகிறார்கள். ஆனால் பெரிய புராணத்தில் திரு நாவுக்கரசு நாயனார் புராணத்தில் சேக்கிழார் இவற்றை வெவ்வேறா கவே கூறியுள்ளார் (காண்க பாடல் கள், 131).

வழிவழியாக வந்த சைவ சமயக் குடும்பத்தில் பிறந்தவர் மருள்நீக் கியார். சமண சமய நூல்களைக் கற்ற மருள் நீக்கியார் தருமசேனர் என்று பெயர் பெற்றார். இவரது தமக்கை திலகவதியார் திருவதிகை வீரட்டானத்தில் மலர்ச்சோலையும், மடமும் அமைத்துத் தொண்டுசெய்து வந்தார். தனது தம்பிக்காகவே உயிர் வாழும் திலகவதியார் இறைவனிடம் வேண்டியது வேறு ஒன்றும் அல்ல. தம்பி மருள் நீக்கியாரை மீண்டும் சைவ நெறிக்கு மாற்றி அருள்புரிய வேண்டும் என்பதுதான்.

இறைவன் விளையாட்டால் பாடலி புத்திரச் சமணப்பள்ளியில் இருந்த மருள் நீக்கியாருக்கு நெருப்பாய்ச் சுடும் சூலை நோய் அவரது வயிற்றில் உண்டாகியது. வடனவத்தி, கொடிய விஷம், வச்சிராயுதம் ஆகிய மூன்றும் சேர்ந்து குடலில் புகுந்தால் ஒருவரை என்ன துன்பப்படுத்துமோ அதுபோல மருள்நீக்கியாரை வேத னைப்படுத்தியது நோய்.

சமண முனிவர்கள் பலர் சேர்ந்து தமது பாத்திரத்திலிருந்த நீரை மந்திரித்து மருள்நீக்கி யாருக்குக் கொடுத்தும், மயில் தோகையால் உச்சி முதல் கால் வரை நீவியும் பார்த்தார்கள். பலனற்றுப் போனது. முயற்சியைக் கைவிட் டார்கள் சமண முனிவர்கள். சூலை நோய் மேலும் பெருகியது.

திருவதிகை மருள் நீக்கியாரை ஈர்த்தது. யாருக்கும் சொல்லாமல்

இரவுடன் இரவாகத் திருவதிகை யடைந்து தமக்கையாரிடம் வந்து சேர்ந்தார்.

''நந்தமது குலம் செய்த நற்றுவத்தின்
பயன் அணையீர் !
இந்தவுடல் கொடுஞ்சூலைக் கிடைந்
தடைந்தேன் இனி மயங்காது
உய்ந்து கரையேறும் நெறி உரைத்
தருளும ''

என்று தமக்கையாரை வேண்டி தமக்கை திலகவதியாரும் தம்பியை ஏற்றுக் கொண்டார்.

"அதிகை இறைவனைப் பணிந்து பணிசெய்வீர்'' என்று ஐந்தெழுத்தை ஓதி தம்பி மருள்நீக்கியாருக்குத் திருநீறு தந்தார் திலகவதியார்.

"கூற்றாயினவாறு விலக்ககிலீர்'' என்று தொடங்கும் திருப்பதிகம் பாடிய அளவில் சூலை நோய் நீங்கப் பெற்றார் மருள்நீக்கியார். 'செந்தமிழின் சொல்வளத்தின் பதிகம் பாடிய காரணத்தால் நாவுக்கரசு என்னும் திருப்பெயர் விளங்கட்டும்,'' என்று வானிலிருந்து ஒரு சொல் எழுந்தது என்று குறிப்பிடுகிறார் சேக்கிழார். அன்று முதல் மருள்நீக்கியார் நாவுக்கரசர்எனனும் பெயரால் அழைக்கப் பட்டார்.

உழவாரப்பணி செய்து, கோயில் திருச்சுற்றைத் தூய்மையாக்கும் திருப்பணி செய்து வந்தார் நாவுக்கரசர்.

மருள்நீக்கியார் சைவராகி நோய் நீங்கப் பெற்றதையறிந்த பாடலிபுத்திரச் சமண முனிவர்கள் 'தம் பெரும் சமயம் வீழ்ந்தது' என்று பயந்தார்கள்.

அக்காலத்தில் அப்பகுதி பல்லவ மன்னன் மகேந்திரவர்மனின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. அவனும் சமண சமயத்தைத் தழுவியவன். ஆகவே நடந்த நிகழ்ச்சியை அவனுக்குத்தெரிவித்தனர். அரசன் ஒத்துழைப்பினால் நாவுக்கரசரைக் கொல்லப் பலமுயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. எல்லா முயற்சிகளும் தோல்வி அடைந்தன.



கட்டி முடிக்கப்படாத திருவெள்ளறைக் கோயில்

நாவுக்கரசரைக் கல்லுடன் சேர்த்துக் கட்டி ஒரு படகில் கொண்டு போய் வங்கக் கடலில் விட ஆணையிட்டான். நாவுககரசர்,

''சொல்துணை வேதியன் சோதி
வானவன்
பொன்துணை திருந்து அடி பொருந்
தக் கைதொழ
கல்துணைப் பூட்டி ஓர் கடலில் பாய்ச்
சினும
நலதுணையாவது நமசசிவாயவே ''

என்னும் பதிகம பாடிக் கல்மிதபபில் மிதந்து கரையேறினார் நாவுக்கரசர்.

இசசெய்திகளை சேக்கிழார் தமது திருத்தொண்டர் புராணத்தில் (பாடல்கள் 34-131) கூறியுள்ளார். நாவுக்கரசர் கல்மிதப்பில் மிதந்து கரையேறிய இடம் 'கரையேறிய குப்பம்' என்னும் பெயருடன் திருப்பாதிரிப்புலியூருக்கு அருகில் உள்ளது.

நாவுக்கரசரின் சிறப்புக்களை அறிந்த மகேந்திர பல்லவன் தானும் சைவ சமயத்தைத் தழுவினான். பிறகு திருப்பாதிரிப்புலியூருககு அருகில் உள்ள பாடலிபுத்திரச் சமணப்பாழிகளை அழித்து அங்கிருந்த கட்டடப்பகுதிகளைக் கொண்டு சென்று திருவதிகை வீரட்டானத்தில் 'குணபரவீச்சுரம்' என்னும் சிவன் கோயிலைக்கட்டினான்.

'குணபரன்' என்பது மகேந்திர பல்லவனின் சிறப்புப் பெயர்களில் ஒன்று. பல்லவமன்னன்கட்டிய கோயிலுக்குக் குணபரவீச்சுரம் என்று பெயர்சூட்டியகாரணத்தால் அம்மன்னன் கி.பி. 600 முதல் 630 வரை ஆண்ட மகேந்திரவர்மனாகத்தான் இருக்க வேண்டும்.

திருப்பாதிரிப்புலியூருக்கு அருகில் கடலிலிருந்து கரையேறிய நாவுக்கரசர் பாடலீசுவரர் கோயிலுக்குச் சென்று,

'' ஈன்றாளுமாய் எனக்கு எந்தையும்
ஆய், உடன் தோன்றினராய்
மூன்றாய் உலகம் படைத்து
உகந்தான் மனத்து உள்ளிருக்க

என்றுன இமையவர்க்கு அனபன
திருப்பாதிரிப் புலியூர்
தோனருத் துணையாய் இருந்தனன்
தனனடி யோங்களுக்கே ''

என்று தொடங்கும் திருப்பதிகம பாடினர்.

மேற்காணும் பதிகத்தில் சிவபெருமானை 'தோன்றுத் துணைநாதர்' என்று நாவுக்கரசர் குறிப்பிட்டிருப்பதால் இங்குக் கோயில் கொண்டுள்ள இறைவருக்குத் 'தோன்றுத் துணை நாதர்' என்னும பெயரும் உண்டு

இத்தலத்திற்கு வருகை தந்த திருஞானசம்பநதர் பாடலீசுவரர்க் கோயிலுக்கு வந்து பதிகம் பாடியுள்ளார். அந்தப்பதிகம்,

'' முன்னம நின்ற முடக்கால்
முயற்கருள் செய்து நீன்
புனனை நின்று கமழ் பாதிரிப்புலியூர்
உளான்
தனனை நின்று வணங்கும் தனைத
தவம் இல்லிகள்
பின்னை நினற பிணியாக் கையெப்
பெறுவார்களே ''

என்ற பாடலுடன் தொடங்குகிறது.

கால் முடமாகிய மங்கண முனிவர் சாபம் பெற்ற புராணச் செய்தியை திருஞானசம்பந்தர் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். மேலும்,

'' புள்ளினங்கள பயிலும் பாதிரிப்
புலியூர் ''
'' மதியம் ஒத்த கதிர்போல் ஒளிமமணற்
கானல்வாய்ப
புதிய முததம திகழ் பாதிரிபபுலியூர்''
'' அன்னம தாவும் மணியார் பொழில்
மணியார் புனனை
பொன்னந் தாது சொரி பாதிரிப்
புலியூர் ''

எனறு திருஞானசம்பந்தர் பலவாறு இத்தலத்தைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

சுந்தரமூர்த்தி நாயனர் இததலத்தில பாடிய பாடல் நமக்குக் கிடைக்கவிலலை. சேக்கிழார் தமது திருத்தொண்டர் புராணத்தில் சுந்தரமூர்த்தி நாயனர் பெண்ணையாற்றைக் கடந்து திருவதிகை வீரட்டானத்தை அடைந்ததைக்குறிப்பிடுகிருர். அங்கு சுந்தரர் பதிகம் பாடியதையும் கெடிலத்தில் நீராடியதையும் குறிப்பிடுகிருர். கெடிலத்தின் தென்கரையை அடைந்து அங்குள்ள 'திருமாணிக்குழி' என்னும் தலத்து இறைவனை வழிபட்டுவிட்டுத் தில்லை செல்வதாகக் குறிப்பிடுகிருர்.

சுந்தரர் திருப்பாதிரிப்புலியூருக்கு வந்ததாகவோ, பதிகம் பாடியதாகவோ சேக்கிழார் தமது திருத்தொண்டர் புராணத்தில் குறிக்கவில்லை. சுந்தரரும் இத்தலத்திற்கு வருகை தநது பதிகம பாடியிருக்க வேண்டும். நமது போற்றுதல் இல்லாமையால் அவருடைய பதிகம் நமக்குக் கிடைக்காமல் போய் விட்டது.



ஸ்ரீ பானகம் நரசிம்ஹசுவாமி கோயில்—மங்களகிரி
எம். ராஜ்யலட்சுமி

அருணகிரிநாதர் (கி. பி. 1500) இத்தலத்திற்கு வந்து இங்குக்கோயில் கொணடுள்ள முருகனை, 'நிணமொடு குருதி நரம்பு மாறிய......' என்று தொடங்கும் திருப்புகழ் பாடியுள்ளார். இத்திருப்புகழில் இத்தலத்தின் சிறபபை, 'அமலை முன் அரிய தவம் செய் பாடலவளநகர்' என்று குறிப்பிடுகிருர் அருணகிரியார்.

சுமார் 100 ஆண்டுகளுக்கு முன்பு வாழந்த இலக்கணம் சிதம்பரநாத முதலியார் இத்தலத்தின் மேல் 'திருப்பாதிரிப்புலியூர் புராணம்' என்னும் நூல் எழுதியுள்ளார். அச்சிடப்பட்ட ஆண்டு 1896.

'கரையேறவிட்ட நகாபபுராணம்' எனனும் நூலை இயற்றியவர் க. ரா. சிவசிதம்பர முதலியார். இயற்றிய ஆண்டு 1892.

கோயிலைச் சுற்றி வருவோமா?

முன் கோபுரத்தைக் கடநது உள்ளே போனல் 20 தூண்கள் கொண்ட மண்டபம் உள்ளது. யாளி மற்றும் குதிரை வீரர்களுடன் கூடியவை அநதத் தூண்கள். பலிபீடம கொடிக்கம்பம், நந்தி ஆகியவையும் இம்மண்டபத்தில் அமைந்துள்ளன.

இம்மண்டப வாயிலைக் கடந்து சென்றால் பெரிய திருச்சுற்று ஒன்று உள்ளது. இதில் பிறகு வலம் வரலாம். நேராக மூலவர் இருப்பிடத்திற்குச் செல்ல அகன்ற மேடான தளத்தை அடைய வேண்டும். முன் மண்டபம் 24 தூண்கள் உடையது. சிற்ப வேலைப்பாடுகள் எவற்றையும் குறிப்பிட்டுச் சொல்ல முடியாது. அகன்ற உயர்ந்த உலோகத்தால் செய்யப்பட்ட திருவாசி(வளைவு)யில் நுழைகிறோம். பிறகு பஞ்சலோக நந்தி, பிறகு இடைக்கட்டு மண்டபம். பிறகு உள்நாழி. அதாவது பாடலேசுவரர் லிங்க வடிவில் கோயில் கொண்டுள்ள இடம். போன வழியிலேயே திரும்பவந்து அகன்ற திருச்சுற்றை வலம்வர தென்புறம் திரும்புகிறோம்.

அங்கு நாவுக்கரசரின் சன்னதி காணப்படுகிறது. தென்திசைத் திருச்சுற்று மேடையில் 63 நாயன்மார்களின் திருவுருவங்கள். தெற்குப் பார்த்து விற்றிருந்து நான்கு முனிவர்களுக்குப் போதிக்கும் கோலத்தில் தென்திசைச் செல்வர் (தட்சிணாமூர்த்தி)

மேற்குத் திருச்சுற்று மேடையில் அம்மையும் அப்பனும் ஆகிய இருவர்க்கும் இடையில் குழநதை வடிவில் முருகன் காட்சிதரும் 'சோமஸ்கந்தர்' மற்றும் பழமையைப் பறை சாற்றிக் கொண்டிருக்கும் பல ஐம்பொன் திருமேனிகள் காணப்படுகின்றன. தனியே திருநாவுக்கரசர், நால்வர், பிட்சாடனர், சந்திரசேகரர் முதலிய திருமேனிகள் நம்மைக் கவர்ந்திழுக்கின்றன.

மேற்குத் திருச்சுற்றின் வடகோடியில் இருப்பது முருகன் சன்னதி. இங்குதான் அருணகிரிநாதர் வருகை தந்து ஏற்கனவே குறிப்பிட்ட திருப்புகழைப்பாடி இருக்க வேண்டும். தமது திருப்புகழில், "திருமாலின் மருகோனே! நிணம்,இரத்தம் நரம்பு, தசை, குடல், எலும்பு, தோல் இவற்றை அடுக்கி ஆக்கப் பட்டது உடம்பு. நோயால் பிடிக்கப்படுவது. ஒன்பது துளைகள் கொண்டது இது. நல்ல உணர்வு இன்றி செபதபங்கள் ஏதும் இன்றி வாழ்நாள் கழித்து, நெஞ்சு தனது நினைவை இழக்காத முன்னம் நீ ஆறுமுகங்களுடன் என்னிடம் வந்து நான்மறை மற்றும் உபநிடதங்களையும் விளங்கும்படி அருள் புரிய வேண்டும்" என்று வேண்டுகிறார்.

காவல் மரமாகிய (தலவிருட்சம்) பாதிரிமரம் ஒன்று பட்டுப்போன நிலையில் தகடுகள் போர்த்தப்பட்டு வடக்குச் சுற்றில் காணப்படுகிறது. இம்மரத்தின் நிழலில்தான் பார்வதி உருவம் அற்ற நிலையில் தவம் செய்து பிறகு இறைவனை அடைந்தாளாம். அருந்தவ நாயகிக்காகச் சிறிய சன்னதி ஒன்றும இங்குள்ளது.

வடக்குச் சுற்றின் கிழக்குக் கோடியில் நடராசர் ஐம்பொன் திருமேனி காணத்தககது. வடக்குச் சுற்று மதிலில் உள்ள வாயில் வழியே பாடலீசுவரர்க் கோயிலுக்கு வடபுரமுள்ள பெரியநாயகி அம்மன் கோயிலுக்குச் செல்லலாம்.

வெள்ளிக் கவசமிடப்பட்ட காளை மாட்டு வாகனம் மற்றும் பல்லாக்கு, இருபது அடி உயரமுள்ள வெள்ளி ரதம், தங்கமுலாம் பூசப்பட்ட கைலாச வாகனம் - கோவிலுக்குச் சொந்தமானவை.

வைகாசி மாதம் 12 நாட்கள் பிரம்மோற்சவம், கார்த்திகை மாதம் முதல் திங்கட்கிழமை சங்காபிஷேகம் ஆகியன சிறப்பான திருவிழாக்கள் ஆகும். பிரம்மோற்சவம் நடக்கும் ஆறும்நாள் வெள்ளித்தேரில் பாடலேசுவரர் திருவீதி பவனி நடைபெறும்.

பாடலேசுவரர் திருவுருவம் ஆண்டிற்கு இரண்டு தடவை சித்திரை மாதம் அனுட நட்சத்திரம அன்றும், பங்குனிப் பெருவிழாவின் ஆறும் நாள் அன்றும், 'கரையேறிய குப்பம்' என்னும் வண்டிப்பாளையத்திற்கு வருகை தரும்.

நாவுக்கரசர், திருஞானசம்பந்தர் முதலிய நாயன்மார்களின் பாதம் பட்ட திருப்பாதிரிப்புலியூருக்கு வாய்ப்பு ஏற்படும்போது ஒரு தடவை நீங்களும்சென்று வாருங்களேன்





முருகன் கோயில் புஷ்பகிரி (ஆ.பி.)
(மட்ல அனந்தராயரால் கட்டப்பட்டது.)

சக்கரவர்த்தி அயோத்தியில் சுகமாய் வசித்து வந்தார்.

இப்படி யக்ஞம் முடிந்து, ஆறு ருதுக்கள் கடந்து, பன்னிரெண்டாவதான சித்திரை மாதம் நவமிதிதி, அத்தியை தேவதையாக உடைய புனர்வசு நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில், கடகலக்கினத்தில், கௌஸல்யா தேவி, சகல லோகங்களுக்கும் நாதனும், சகல சுப லக்ஷணங்களும் பொருந்தினவரும், சர்வ லோகங்களாலும் நமஸ்கரிக்கப்படுகிறவரும், மஹாவிஷ்ணுவின் பாதி அம்சமுள்ளவரும், இக்ஷ்வாகு குலத்தைப் பெருமைப்படுத்தப் போகிறவருமான ஸ்ரீராமனென்ற புத்திர ரெத்தினத்தைப் பெற்றாள்.

அப்பொழுது சூரியனும், அங்காரகனும், குருவும், சுக்கிரனும், சனியும் முறையே தங்களுடைய உச்சஸ்தானமாகிய மேஷம், மகரம், கடகம், மீனம், துலாமென்ற ராசிகளில் இருந்தார்கள். குருவம், சந்திரனும் கூடிப் பிரகாசித்தார்கள். வஜ்ராயுத பாணியான தேவேந்திரனைப் பெற்ற அதிதி தேவியைப் போல், கௌஸல்யையும் எல்லையற்ற தேஜஸுள்ள அந்தப் புத்திரனைப் பெற்று மிகவும் அழகுடன் விளங்கினாள். புஷ்ய நக்ஷத்திரத்தில் மீன லக்கினத்தில்,



# ஸ்ரீராம ஜனனம்

திரு. என். சுப்பிரமணியன்
ஒரத்தநாடு.

தசரத சக்கரவர்த்தி செய்த அசுவமேதம புத்திரகாமேஷ்டியுடன் முடிந்தது. தேவர்கள பாகங்களைப் பெற்றுக்கொண்டு ஸ்வர்க்கம் சென்றார்கள். அரசன் பாரியைகளுடன் யாகதீக்ஷை நீக்கி, வந்திருந்த அரசர்களுக்குத் தகுந்தபடி மரியாதை செய்து அனுப்பினார். அவர்கள் வசிஷ்டர் முதலிய மஹரிஷிகளை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, வஸ்திர ஆபரணங்களால விளங்கும் சைன்யத்துடன் சந்தோஷமாய்த் தஙகளுடைய தேசங்களுக்குச் சென்றார்கள். பிறகுதசரதர் சைன்ய பரிவாரவாகனங்களோடும், பத்தினிகளோடும்வசிஷ்டர் முதலிய பெரியோர்களை முனனிட்டுக்கொண்டு அயோத்திக்கு வந்தார். ரிஸ்யசிருங்கரும் சாந்தையும் ரோமபாதரும் அங்கதேசத்திற்குப் போனார்கள். இப்படி அனைவருக்கும் விடைகொடுத்து அனுப்பி, தன் எண்ணங்கள் யாவும்நிறைவேறி, தனக்குக்கிடைக்கும் புத்திரபாக்கியத்தைப் பற்றி யோசித்துக் கொண்டு

வீண்போகாத பராக்கிரமமுள்ளவரும் தெளிந்த புத்தியுள்ளவரும் ஸகல நற்குணங்களும் பொருநதினவரும் விஷ்ணுவின் எட்டிலொரு அம்சமுமான பரதன் கைகேயியிடத்தில் பிறந்தார்.

பிறகு ஆயில்ய நக்ஷத்திரத்தில் சூரியோதயத்திற்குப் பின், மஹா வீரர்களாய், சகல அஸ்திர சாஸ்திர வித்தைகளில் நிபுணர்களாய் விளங்கும் லக்ஷ்மணனும், சத்ருக்னனும் சுமித்திரையிடத்தில் பிறந்தார்கள்.

விஷ்ணுவின் நாலிலொரு அம்சம்லக்ஷ்மணனிடததிலும்எட்டிலொரு அம்சம் சத்ருக்னனிடத்திலும விளஙகிறது. அவர்கள் இரட்டைப் பிள்ளைகள். நற்குணங்கள் பொருந்தி, ஒருவருக்கொருவர் சமானமாய்ப் பூரட்டாதி, உத்திரட்டாதி நக்ஷத்திரங்களைப் போல் காநதியையுடைய அந்த நான்கு புத்திராகள் அவதாரம் செய்த பொழுது, கந்தர்வர்கள் மதுரமாய்ப் பாடினார்கள், அப்ஸரஸகள் ஆடினார்கள். தேவதுந்துபி முழங்கிற்று. ஆகாசத்திலிருந்து புஷ்பமாரி பொழிநதது. அயோத்யா வாசிகள் மஹோத்ஸவம் கொண்டாடினார்களா. ஜனங்களாலும், நாட்டியம் ஆடுகிறவர்களாலும, ஆட்டுவிப்பவர்களாலும், பாட்டாலும வாத்திய கோஷங்களாலும் ராஜவீதிகள் நிறைந்தன. அப்பொழுது தசரதர் பிராமணர்களுக்குக் கணக்கில்லாமல் பசுக்களையும், திரவியங்களையும் தானம் கொடுத்தார். ஸூத்தமாக வந்தவர்களுக்கு விசேஷ வெகுமானம் செய்தார். திருககுமாரர்கள் பிறந்த பதின்மூன்றாவது நாளில் வஸிஷ்ட மஹரிஷி வெகு சந்தோஷத்துடன் கௌசலையயின் புத்திரனுக்கு ஸ்ரீ ராமனென்றும, கைகேயியின் புத்திரனுக்குப் பரதனென்றும், சுமித்திரையின் புத்திரர்களுக்கு லக்ஷ்மணனென்றும், சத்ருக்னனென்றும் பெயர் வைத்தார். அப்பொழுது தசரதர் நகரத்திலும் நாட்டிலுமுள்ள ஏழைகளுக்குத் திருப்தியாய் அன்னமிட்டு அளவற்ற ரத்தினங்களைத் தக்ஷிணையாகக் கொடுத்தார். அந்த ராஜ குமாரர்களுக்கு அன்னப்பிராசனம், சௌளம், உபநயனம் முதலிய ஸம்ஸ்காரங்கள் காலம் தவறாமல் விதிப்படி செய்யப்பட்டன.

அவர்களுக்குள் த்வஜத்தைப் போல் விளங்கும் மூத்தவரான ஸ்ரீராமன், தன் பிதாவுக்கு அளவற்ற சந்தோஷத்தை உண்டு பண்ணுகிறவராய், பிரஹ்மாவைப் போல் எல்லாப் பிராணிகளுக்கும் இஷ்டமுள்ளவராய் இருந்தார். இந்தக் குமாரர்கள் வேத வேதாந்தஙகளையும் பூர்ணமாகக் கற்றார்கள். சூரர்களாகவும் ஞானவான்களாகவும் சகல நற்குணங்களும் பொருந்தினவர்களாகவும், ஜனங்களுக்கு அனுகூலத்தைச் செய்வதிலேயே நோக்கமுள்ளவர்களாகவும் வளர்ந்தார்கள். அவர்களில் ஸ்ரீராமன் அபாரமான காந்தியும் வீணாகாத பராக்கிரமமுள்ளவர். சந்திரனைப்போல் சகல லோகங்களுக்கும் பிரியமானவர். யானையேற்றம், குதிரையேற்றம், ரதம் ஓட்டுதல், வில் வித்தை முதலியவைகளில் நிபுணர். பெற்றோர்களுக்குப்பணிவிடை செய்வதில் மிகவும் முயற்சியுள்ளவர்.

விசேஷ லக்ஷ்மி பொருந்திய லக்ஷ்மணன், குழந்தைப் பருவம் முதல் அனைவர்க்கும் பிரியமானவர். தன் தமையனுன ஸ்ரீராமனிடத்தில்மனோவாக்குக் காயங்களால் அளவற்ற பிரியம் உள்ளவர். லக்ஷ்மணன் பக்கத்தில் இல்லாவிட்டால் புருஷோத்தமனை ராமனுக்குத் தூக்கம் வராது, ருசியுள்ள அன்னத்தையும் அவரின்றி புசிப்பது இல்லை. தன் வலது கையாகவும், வெளியில் சஞ்சரிக்கும் உயிராகவும் அவரை நினைத்தார். இராகவன் குதிரைமேலேறி வேட்டைக்குச் செல்லும் பொழுதுஇளையபிரான்வில்லும் கையுமாகஅவரைப்பின்தொடர்வார். அவருக்குத் தம்பியான சத்ருக்னன் அப்படியே பரதனிடத்தில் எல்லையற்ற அன்பு வைத்தான். தன் உயிரைக் காட்டிலும் அவனிடத்தில் பரதனுக்கும் அதிகப் பற்றுண்டு.

மிகுந்த அதிருஷ்டசாலிகளும் பிரீதி வைக்கத் தகுந்தவர்களுமான நான்கு குமாரர்களுடைய தசரதர், தேவர்களால் சூழப்பட்ட பிரஹ்மாவைப் போல் வெகுப் பிரீதியடைந்தார். அவர்கள் சாஸ்திரங்களைக் கற்று ஞானத்தையடைந்ததால் நற்குணங்கள் பொருந்தி, ஒரு வேளை அஜாக்கிரதையால் கெட்ட காரியங்களில் மனம் சென்றாலும் அதனால் வெட்கமடைந்து எல்லாவிஷயங்களையும அறிந்தவர்களென்ற கீர்த்தியையும், லௌகிக காரியங்களில் திறமையையும், வருங்காலத்தை அறியும் சக்தியையும், கண்ணைப் பறிக்கும் தேஜஸையும் உடையவர்களாயிருந்ததால், தசரதர் லோகாதிபதியான சதுர்முகனைப்போல் பரம சந்தோஷமடைந்தார். அவர்களும் மஹாராஜா தங்களிடத்தில் வைத்திருககும் பிரீதியைப் பார்த்து, வேதம் ஓதுவதிலும் வில்வித்தையிலும், பித்ரு சிஷ்ருஷையிலும் முதன்மை பெற்றனர்.

பிறகு தசரதர் ஒருநாள் உபாத்தியாயரையும் பந்துக்களையும் மந்திரிகளையும் வருவித்துத்தன் புத்திரர்களுக்கு மணம் செய்ய வேண்டியதைப்பற்றி ஆலோசித்துக் கொண்டிருக்கையில், மஹா தேஜஸ்வியான விஸ்வாமித்திர மஹாமுனி, அவரைப் பார்க்க விரும்பி அங்கே வந்து "காதியின் புத்திரனான விசுவாமித்திரன் தங்களைப் பார்க்க வந்திருக்கிறானென்று அரசனிடத்தில் சீக்கிரமாய்த் தெரிவியுங்கள்" என்று காவலாளிகளுக்குச் சொன்னார். அவர்கள் பயபக்தியுடன் பரபரப்படைந்து அரண்மனைகருள் ஓடி, விசுவாமித்திரர் வந்திருப்பதை ராஜாவுக்குத் தெரிவித்தார்கள். அவர் பரமானந்தமடைந்து வெகு ஜாக்கிரதையாக புரோகிதரை முன்னிட்டுக்கொண்டு, இந்திரன் பிரஹ்மாவை உபசரிப்பது போல் மஹரிஷியை எதிர்கொண்டழைத்தார். கடுமையான விரதங்களை அனுஷ்டிக்கும் அநத முனிவர் தேஜஸால் ஜ்வலிப்பதைக் கண்டு அரசன் முகமலாநது, புரோகிதர் மூலம் அவருக்கு அர்க்கிய பாத்திரங்களைக் கொடுத்தார்.

விதிப்படி செய்யப்பட்ட அந்தப் பூஜையைக் கௌசிகர் அங்கிகரித்து அரசனையும், நகரத்தையும் பொக்கிஷத்தையும், தேசங்களையும் பந்துக்களையும் மித்திரர்களையும் பற்றி

# விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

க்ஷேமம்விசாரித்தார். "மஹாராஜா உம்மால் ஜயிக்கப்பட்டவர்கள் கீழ்ப்படிந்து நடக்கிறார்களா? யாகங்களால் தேவர்களையும், அதிதி பூஜை ராஜநீதி, நான்குவித உபாயம் முதலியவைகளால் மனிதர்களையும நன்றாய்த் திருப்தி செய்கிறீரா?" என்று கேட்டு, வஸிஷ்ட வாமதேவ ஜாபாலி முதலியவர்களையும விதிப்படி உபசரித்து க்ஷேமம் விசாரித்தார். அதனால் அவர்கள் வெகு சந்தோஷமடைந்து, ராஜசபைக்கு வந்து பூஜிக்கப்பட்டு உசிதமான ஆசனங்களில் அமர்ந்தார்கள்.

பிறகு எல்லையற்ற உதார சுபாவமுள்ள தசரதா சந்தோஷத்தால் தேகம் புளகித்து, கௌசிகரைத் துதித்து "ஜனன மரணங்களால் பீடிக்கப்படும் மனிதர்களுக்கு அவைகளைப் போக்கும் அமிருதம் கிடைத்தால் எப்படியோ (அல்லது, மரணமடைந்தவன் பிழைத்து வந்தால் எப்படியோ); பல வருடங்களால் மழையில்லாமல் வாடின இடத்தில், மேகங்கள் ஓயாமல் மழை பெய்தால் ஜனங்களுக்கு எப்படியிருக்குமோ, எவ்விதத்திலும் தனக்குப் பத்தினியிடத்தில் வெகு காலமாய்ப் புத்திரன் பிறக்காமல், அந்த ஆசையை விட்டவனுக்குத் திடீரென்று அந்தப் பாக்கியம் கிடைத்தால் எப்படியோ; கெட்டுப்போன நிதிகள் தானுய்க் கிடைத்தால் எபபடியோ; பிரியமான புத்திரன்முதலியவர்களுக்கு விவாஹ மஹோத்ஸவம் நோந்தால் நமக்கு எப்படியோ: அவ்விதமான சந்தோஷத்தை, ஒருநாளும எதிர்பாராத தங்களுடைய வரவால் அடைந்திருக்கிறேன்."

"க்ஷேமமமாய் வநதீர்களா? என் சந்தோஷத்திற்கோ எல்லையில்லை. தங்களுடைய இஷ்டத்தை எப்படி நிறைவேற்றவேண்டும்? தங்களைவிட உத்தமமான பாத்திரம் எனக்குக் கிடைக்குமோ? என் யத்தனமில்லாமல் நான் எதிர்பாராமல் என்னைத் தேடி வந்தீர்களே! என் ஜன்மம் இன்றுதான் கடைத்தேறிற்று; என் வாழ்நாள் இன்றுதான் பயன் அடைந்தது. தாங்கள் முதலில் அரசராய் சகல போகங்களையும் அனுபவித்தீர்கள். பிறகு கடுந்தவத்தால் ராஜரிஷியாகி பிரஹ்மரிஷி பதவியை அடைந்தீர்கள் எவ்விதத்திலும்தங்களைநான் பூஜிக்க வேண்டியவன்; யாதொன்றிலும் தங்களுக்கு ஆசையில்லை. தாங்கள் இங்கேவந்ததை நினைத்து நினைத்து எனக்கு ஆச்சரியம் பொங்குகிறது. தங்களுடைய வரவால் நான் மிகவும் பரிசுத்தனுனேன்; தங்களைத் தரிசித்தால் புண்ணிய க்ஷேத்திரங்களை அடைந்தவனானேன்; தாங்கள் எதையும் கொடுக்கக்கூடிய பிரபு வல்லவா? என்னை உத்தேசித்து இங்கே வந்த காரியத்தைச் சொல்ல வேணடும். தங்களுடைய ஆக்ஞையை நிறைவேற்றித் தங்களால் அனுகிரஹம் பெற விருமபுகிறேன். தாங்கள் எண்ணி வந்த காரியம் எதுவானாலும் யோசிக்கக்கூடாது; குறைவில்லாமல் முடிக்கிறேன். தாங்கள் எனக்குத் தெயவமலலவா? தங்களுடைய வரவால் எனக்கு விசேஷ க்ஷேமமும் நிகரற்ற தர்மமும் கிடைத்திருக்கின்றன" என்று இராம ஜனனத்தில்தான் பெற்ற மகிழ்ச்சியை இவ்வாறெல்லாம் வெளிப்படுத்தினார். பெருந்தன்மையுள்ள தசரதர் வணக்கமாய்ச் சொன்ன வார்த்தைகள், உத்தம குணங்களால் அலங்கரிககப்பட்டு ஒப்பில்லாத கீர்த்தியடைந்த கௌசிகருடைய மனத்திற்கும் காதிற்கும் மிக்க சுகத்தைக் கொடுத்தன.

இதி ஹ்ருத2யஸுகம் நி பரம்ய
வாக்யம்
ஸ்ருதிஸுக2 மாத்மவதா
விநீதமுகதம் |
பரதி2த கு2ணயஸா கு2ணைர் விஸிஷ்ட
பரமரிஷி : பரமம் ஜகா2ம
ஹர்ஷம் ||

பல ஊர்களில் பெருமைமிக்க ஸ்ரீராம நவமியை மிகசிறப்பாகக்கொண்டாடுகிறார்கள். இவ்வாறு கொண்டாடுவதால் உலகம்சுபிட்சம்பெறவும், நாம் எல்லோரும் நலமாக இருக்கவும் இந்த ஸ்ரீராம ஜனன நாளைக் கொண்டாடுகிறார்கள்.

'ராமே'தி வர்ணத்2வய மாத4ரேண
ஸத2ா ஸ்மரந் முக்திமுபைதி
ஜந்து : |
கலௌ யுகே2கல்மஷ மாநுஷாணாம்
அந்யத்ர த4ர்மே கலு2 நாதி4கார:||

'ராம' என்ற இரண்டு எழுத்துக்களைச்சிரத்தையுடன் எப்பொழுதும் நினைத்தால் முக்தி கிட்டும். கலியுகத்தில் குற்றங்கள் நிறைந்த மனிதர்களுக்கு ராமநாம ஜபத்தைத் தவிர்த்துவேறொரு கர்மாவிலும்அதிகாரமில்லையன்றோ? ❖

# இராம நாமச் சிறப்பு

வால்மீகி முனிவர் இராமாயண ஸ்லோகங்கள்கோடிஎழுதினார். அவர் எழுதிய இராமாயணம் யாருக்குச் சொந்தம் என்ற கேள்வி தேவர், மானிடர் மற்றும் அசுரர் ஆகிய மூவரிடையே எழுந்தது. தேவர்கள் எங்களுக்கே இராமாயணம் சொந்தம் என்று உரிமை கொண்டாடினர். மானிடர்களும் எங்களுக்கே சொந்தம் என்றும் வாதிட்டனர். அசுரர்களும் எங்களுக்கேதான் சொந்தம் என்று போரிட்டனர். அவர்கள மூவருக்கும் வாதம் பெரும் அளவில் வளர்ந்து விட்டது. அவர்களுக்குள் சமாதானம் ஏற்படுவதாகத் தெரியவில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் வலிமைப் பெற்று இருந்தபடியால் ஒருவரை ஒருவர் வெல்லஇயலவில்லை ஆனல் சண்டையோ தொடர்ந்து நடந்து வந்தது. இறுதியில் மூவரும் வழக்கைத் தீர்ப்பதற்கு சிவபெருமானின் உதவியை நாடினர்.

சிவபெருமான் அவர்கள் போடும் சண்டையில் இராமாயணம் எங்கு அழிந்துவிடுமோ என்று எண்ணினர். அவர்களுக்குள் சமாதானம் ஏற்படாவிட்டால் இராமாயணத்திறகு எப்பொழுதும் ஆபத்துதான் எனபதை உணர்ந்து கொண்டார். எனவே அவர்கள் வழக்கினை விசாரிக்கும் நீதிபதியாக பொறுப்பு ஏற்றுக்கொண்டார். அந்தமூவர்களையும் அழைத்தார் சிவபெருமான். அம் மூவர்களால் ஒரு கோடி இராமாயண சுலோகங்களில் ஆளுக்கு முப்பத்து மூன்று லட்சம் சுலோகங்கள் வீதம் பகிர்ந்து கொடுத்தார். கோடி சுலோகங்களில் தேவருக்கு முப்பத்து மூன்று லட்சம், மானிடருக்கு முப்பத்து மூன்று லட்சம், அசுரருக்கு முப்பத்து மூன்று லட்சம் வீதம் தொண்ணூற்று ஒன்பது லட்சம் சுலோகங்கள் பகிர்ந்து அளிக்கப்பட்டன.

பாக்கியாக ஒரு லட்சம் சுலோகங்கள் மிஞ்சி இருந்தது. அதையும் ஆளுக்கு மூன்ருக பங்கிட்டுக் கொடுத்தார். கடைசியில் ஒரே ஒரு சுலோகம் மட்டும் மிஞ்சியது. அந்த ஒரு சுலோகத்தையும் பங்கு போட்டார். அந்த சுலோகத்தில் முபபத்திரண்டு எழுத்துக்கள் இருந்தன. முப்பத்து இரண்டுஎழுத்துக்களை ஆளுக்கு பத்து வீதம் மூன்றுபேருக்கும் பங்கிட்டார். முப்பத்திரண்டு எழுத்துக்களில் முப்பது போக மீதி இரண்டு எழுத்துக்கள் இருந்தன. அந்த இரண்டு எழுத்துக்களை மூன்றுபேருக்கு பங்கிடமுடியாது.

என்ன செய்வது? அந்த மூன்று பேர்களும் யோசித்தனர். உடனே சிவபெருமான் 'வழக்கைத்தீர்த்துவைத்த எனக்கு ஏதாவது ஊதியம் வேண்டாமா?இந்த இரண்டு எழுத்துககளை மட்டும்தான் நான் எனக்குக் கிடைத்த ஊதியமாகஎடுத்துக்கொள்கின்றேன்' என்று சொல்லிவிட்டு அந்த இரண்டு எழுத்துக்களையும் எடுத்துக்கொண்டார். லட்சக்கணக்கான எழுத்துக்களையும், சுலோகங்களையும் அடைந்த அந்த மூன்றுபேர்களும் அதற்கு ஒப்புக்கொண்டனர். வெறும் இரண்டு எழுத்துக்கள்தானே சிவனுக்கு என்று எண்ணிக் கொண்டனர். அந்த இரண்டு எழுத்துக்கள்தான் யாவை? "இரா" "ம" என்பவையே அந்த இரண்டு எழுதுக்களாகும்.

கோடி சுலோகங்களின் சாரம் முழுவதும் அந்த இரண்டே இரண்டு எழுத்துக்களில அடங்கிவிட்டது. அவற்றைப்பெற்றதால் ஞானத்திலும், அறிவிலும் எந்த தேவனோ, அரசனோ, மனிதனோ சிவப்பெருமானுடன போட்டியிட்டு வெல்லமுடியவில்லை. 'இராம' நாமச் சிறப்பு இறைவனை எல்லாவற்றிலும் வல்லவனாக மாற்றி விட்டது.

ஆதாரம்: விநோபாபாவே அவர்களின தத்துவக் கதைகள்



திரு. என். ஆர். ஜெயசந்திரன், பி.காம், காவேரிப்பட்டணம்.

ஸப்தகிரி வாசகர்,
எழுத்தாளர் மற்றும்
விற்பனைப பிரதிநிதிகளுக்கு
எங்களுடைய இதயங்கனிந்த
தமிழ்ப் புத்தாணடு
நல் வாழ்த்துகள்

ஆசிரியர்.

# அச்சம் - அதிசயம் - அற்புதம்

உலகில் ஆதிகால மனிதன் இயற்கையின் கொடூர நிகழ்வுகளைக்கண்டு அச்சம் கொண்டான். அவற்றினால் ஏற்படும் விளைவுகளும் கொடுமைகளும் அவனிடம் ஒருவித பயத்தைத் தோற்றுவித்தன. பின் சிந்தனையின் மூலம் தெளிவு பெற்றபோது இயற்கை தரும்நன்மைகளையும் அவற்றின் பலன்களையும் கண்டு அதிசயிக்கத் தொடங்கினான். பின் நாளடைவில் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், கிரகங்கள், ஆறுகள், மலைகள், தாவரங்கள், விலங்குகள் மற்றும் மனிதர்கள் எவ்வாறு தோன்றி வளர்ச்சி பெற்றிருக்கமுடியும் என்று சிந்தித்தபோது ஏதோ அற்புதம் நடைபெறுகிறது என உணர்ந்தான். இவற்றிற்கெல்லாம் ஒரு மூல முழுமுதற்பொருள் இருக்கவேண்டும் என அறிந்து தெளிந்தான். இவ்வுணர்வும், அறிவும், தெளிவும் இறைக் கொள்கையையும் ஆன்மக்கொள்கையையும் தோற்றுவித்தன.

அறிவு அனுபவமாக மாறும்போது 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்ற உயர்நோக்கில் அனைவரும் இம்மண்ணில் நல்ல வண்ணம் வாழ வழி பிறக்கிறது. இவ்வனுபவங்கள் தெய்வீக இலக்கியங்களாக மாறிப் பின் மீண்டும் அறிவில் விளக்கம் பெற்றுப் பிறரின் அனுபவங்களுக்கு வழிகோலுகின்றன. எனவே ஒரு சுழற்சி முறையில் ஆன்ம அனுபவங்களும் தெய்வீகச் செய்திகளும் நமக்கு அளிக்கப்பட்டு வருகின்றன. அவற்றை நமது சிற்றறிவின் மூலம் உற்று நோக்கும் போது பல வியக்கத்தக்க விளக்கங்கள் கிடைக்கின்றன.

ஆன்மிக உணர்வும் தெய்வீக சிந்தனையும் அனுபூதி நிலையும் வளரத் தொடங்கிய போதே இவற்றிற்கு மாறான அல்லது எதிரான சிந்தனைகளும் வளரத்தொடங்கின. மனிதனே அனைத்தின் எல்லை என்றும், இறப்பே வாழ்வின் இறுதி என்றும், கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்றும், இறை என்ற ஒன்று இல்லையென்றும், பயத்தின் வயப்பட்ட மனிதன் தன்னையும் பிறரையும் காத்துக்கொள்ள கடவுளைக் கற்பித்தான் என்றும், இவ்வுலக வாழ்வின் சுவைகளை மகிழ்வுடன் அனுபவிப்பதே பிறப்பின் நோக்கம் என்றும் வாதிக்கப்பட்டுப் பின்பற்றப்பட்டன. இதன் விளைவாக வாழ்வில் அமைதியின்மை, நிரந்தரமற்ற தன்மை, பிறரை ஏளனம் செய்து நிந்தித்தல் போன்றவை வளரத் தொடங்கின. இவ்வாறுள்ளவர்களைக் கண்டு தான் அச்சப்படுவதாக மாணிக்கவாசகர் கூறுகின்றார்.

புற்றில் வாழும் பாம்புக்கும், பிற விலங்குகளுக்கும் பொய்யரின் மெய்க்கும் அஞ்சாமல் பரம்பொருள் பற்றிய செய்திகளைக்கற்காதவர்கள், இடையறாது சிந்திக்காதவர்கள், என்பெலாம் உருகும் அன்பில்லாதவர்கள், தொழுதெழமாட்டாதவர்கள், திருநீறு போன்ற சமயச் சின்னம் அணியாதவர்கள்மலா புனைந்தேத்தாதவர்கள் அகம் நெகிழாதவர்கள், சிறந்த இனிய அறிவில்லாதவர்கள் மற்றும் கண்கள் சோர வாழ்த்தி நின்று ஏத்தமாட்டா ஆண் அல்லாதவர் ஆகியோரைக் கண்டு அஞ்சுகின்றேன் என்கிறார். 'எல்லோருக்கும் முதல்வனாகிய எம்பெருமானை நினையாத பாவிகளை எப்படித்தான்இறைவன் படைத்தானோ' என்ற பொருளில்,

முதல்வனைச் சிந்தியாத அப்
பாவ காரிகளைப் படைத்தனன்
எங்ஙனம படைத்தான் கொலோ!

என்று பெரியாழ்வார் அச்சமுடன் வினவுகின்றார்.

'ஞானம் ஈசன்பால் அன்பே' என்பதற்கேற்ப இறைவன்பால் மெய்தான் அரும்பிவிதிர்விதிர்த்து மெய்யுணர்வு தோன்ற ஞானநெறியில் நின்ற மணிவாசகப்பெருமான், பிறரது ஈனச செயல்களைக்கண்டு ஏன் அஞ்சவேண்டும் என்ற வினா எழுகிறது. திருச்சதகத்தில் (20)' யாமார்க்கும் குடியல்லோம், யாதும்அஞ்சோம்', என்று உறுதியாகக் கூறுபவர் அச்சப் பத்து பதிகம் முழுவதும் சைவநெறியெனும் பத்தி நெறியைப் பின்பற்றாதவர்களைக் கண்டு ஏன் அச்சப்படவேண்டும்? மேலும், கோயில் மூத்த திருப்பதிகத்தில் 'அருளாதொழிந்தால் அடியேனை அஞ்சேல் என்பார் ஆர்? என்று சிவ பரம்பொருளிடமே வினவுகின்றார். அதாவது திருவருள் ஒன்றே உய்யும் வழி எனும்போது அது கிடைக்காவிட்டால் அச்சம் தோன்றுகிறது. திருவருள் வழி செல்லாதவர்களைக்கண்டும் அஞ்சவேண்டியுள்ளது. திருவருள் எல்லோர்க்கும் கிடைத்து விட்டாலோ எதற்கும் அஞ்சவேண்டுவதில்லை. அப்பர்பெருமானும் தன்னைத் துன்புறுத்த அழைத்த அரசனின் தூதுவர்களிடம் 'அஞ்சுவது யாதொன்றுமில்லை; அஞ்ச வருவதும் இல்லை' என்று அழுத்தமாகக் கூறுகிறார். எனினும் வள்ளுவர்

---

டாக்டர் இரா. கோபால கிருஷ்ணன்,
சென்னை.

---

அஞ்சுவது அஞ்சாமை பேதமை
அஞ்சுவது
அஞ்சுவார் அறிஞர் தொழில

என்று கூறுவது போனறு நம்போன்றே பிறரும் திருவருளில திளைககாமல் வாழ்நாளை வீணாகக் கழிததுப் பிறவிப் பெருங்கடலில் சிக்கித் தத்தளிக்ககூடாதே என்ற பெரு நோக்கில்தான் மணிவாசகர் நெறியல்லா நெறியில் நிற்பாரைப்பார்தது அஞ்சுகின்றார் எனக்கருதஇடமுணடு. நம்மாழ்வாரும்,

யானும் நீ தானாய்த் தெளிதொறும
நன்றும்
அஞ்சுவன் நரகம.

என்று ஆனமாவும் இறைவனும் ஒருமைநிலை பெற்றபின உலகியல் என்ற நரகத்தில விழாது திருவடிகளிலே மனம் திளைககவேணடும் என்கிறார்.

இவ்வுலகம் துன்பமயமானது. சாதி குலம், பிறப்பு, ஆணவம, கன்மம, மாயை போன்ற உலகியல் பொருட்களில் ஈடுபாடு வைப்பதால் மனிதன் பிறவிப் பெருங்கடலில் ஆழ்ந்து அலைககழிக்கப்பட்டு அல்லல படுகிறான். இந்நிலையில் திருவருளால் தெய்வம் என்பதோர் சிததம் உண்டாகிக 'கொம்பரில்லாக் கொடிபோல அலமந்து' அலையாமல் 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்ற பேரினபப் பெருவாழ்வு ஏற்படும் போது மனிதன் திருவருளின் அளகக முடியாத ஆற்றலைக் கண்டு வியப்பு அடைகிறான. இத்தகு அதிசயம, ஆண்டவன ஆனமாவிற்கிடையே உள்ள உறவில் நெருககம் ஏற்பட்டு நாயகி நாயக பாவமாக உருப்பெறுகிறது. திருவாய் மொழியில் நம்மாழ்வாருமம,

கடல்ஞானம செய்தேனும யானே
யென்னும்
கடல்ஞால மாவேனும் யானே
யென்னும
கடல்ஞாலம் கொண்டேனும் யானே
யென்னும்
கடல்ஞாலம் கீண்டேனும் யானே
யெனனும
கடலஞாலம் உணடேனும யானே
யெனனும்
கடல்ஞாலத் தீசன வநதேறக்
கொல்லோ?
கடல்ஞாலத் தீாக்கு இவையென்
சொல்லுகேன?
கடல்ஞாலத்து என்மகள்
கறகின்றவே.

எனறு ஆணடவனின செயல்களை ஆன்மாவின செயல்களாகப் படம் பிடித்துக் காட்டுகின்றார்.

'நானேயோ தவம செய்தேன சிவாய நம எனப்பெறறேன' எனும் போது சிவப்பேறும், அப்பேற்றை அடையப்பெறற அடியவாகளின் மத்தியில இருப்பதே ஒருவகை ஆனந்தம எனபதும அதிசயத்தைத் தோற்றுவிககிறது. இந்த அனுபவத்தைத் தான் அதிசயப்பத்தாக மாணிக்க வாசகர் எடுத்தியம்புகினறார்;

நீதி யாவன யாவையு நினைக்கிலேன்
நினைப்ப வரொடுங்கூடேன்
ஏதமேபிறந் திறந்துழல் வேன்றனை
யெனனடி யானென்று
பாதி மாதொடுங் கூடியபரமபரன
நிரந்தர மாய்நின்ற
ஆதியாண்டுதன அடியாரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே.

திருவருள் மீண்டும் பிறவாமல காத்துஆட்கொணடருளி 'அடியாரின் அவரவணைப்பில ஈடுபடுத்தும் அதிசயம் ஒரு கால கட்டத்தில அறபுதமாகத தோனறுகிறது. சிந்தனைக் கரிய பரமபொருள் ஆன்மாவில் அமைதியைத் தோற்றுவித்து 'நம்மையும் ஓர் பொருளாக்கி நாய் சிவிகை ஏற்றுவித்தது' போன்றுமுமமை மலம் அறுவித்து செம்மை நலம் அளித்துக் காத்த நிலை ஒரு சாதாரண நிகழ்ச்சியாகக் கொள்ளமுடியாது. பக்தி நெறி முத்திநெறிகளை அறிவித்துச் சித்தமலம் அறுத்துச் சிவமாககி ஆள்வதும அனறாட வாழ்வியல நிகழ்ச்சியாகக் கருத முடியாது. திருவருளில் முழுமையாகத் திளைப்பவர்கள் இந்நிகழ்சசிகளை இறைவனின்திருவிளையாடல்களாகவே கருதுவர். நீர்க் குமிழிக்கு நிகரான தோன்றி மறையும் இனபங்களே வாழ்க்கையின் குறிக்கோள் எனறு நினைத்த மணிவாசகப்பொருமான திருவருள் அனுபவத்தை ஆற்றாமை வழியில கூறுவது அற்புதப்பத்தாகும்.

மைய லாயிந்த மண்ணிடை
வாழ்வெனும்
ஆழியுள் அகப்பட்டுத
தைய லாரெனுங் சுழித்தலைப
பட்டுநான்
தலைதடு மாறாமே
பொய்யெ லாமவிடத் திருவருள்
தந்துதன்
பொனனடி யிணைகாட்டி
மெய்ய னாயவெளி காடடிமுன்
னினறதோர்
அறபுதம விளம்பேனே.

திருப்பாணாழவாரும்,

பாரமாய பழவினை பற்றறுத்
தென்னை தன்
வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி
எனனுள புகுந்தான்
கோரமாதவம செய்தனன்கொல்
அறியேன அரங்கத்தம்மான் திரு
ஆரமாா(பு) அதன்றோ அடியேனை
ஆட் கொண்டதே.

என்று திருவருள் தனனை ஆட்கொணட விதத்தை அற்புதமாக எண்ணி மகிழ்கின்றாா.

அறிவு. அன்பு, ஆசை, ஈடுபாடு, விருபபு, நட்பு, காதல் போன்றவை மானிடப்பண்புகள் ஈன்இப்பண்புகள் உலகியல வழியில் நிறபோருக்குநிறைவான நிலையை ஏற்படுத்தாமல் ஒருவித அச்சத்தை உண்டாக்கும என்பதைத்தான அடியவர்களின வாழ்வு தெளிவாகக் கூறுகிறது. இப்பணபுகளை இறைவன்பால செலுத்திக் காணும கரணங்கள் எல்லாம் பேரின்பமெனப்பேணும பக்குவம் தோன்றிரால் அடியவர் கூட்டத்தில் இருக்கும் அதிசயத்தைப் பெறலாம். திருவருளின செயலபாட்டை அற்புதமாகக கண்டு மகிழலாம். ★

# கம்பராமாயணத்தில் கல்வியின் சிறப்பு

முன்னுரை .

கவிச்சக்கரவர்த்தியாக விளங்கிய கம்பர் பாடிய நூலகளில் இராம பிரானது வரலாற்றைக் கூறும் இராமாயணமெனனும நூல் இதிகாச நூல்களில் மிகவும சிறந்த நூலாகக் கருதப்படுகிறது. ஏனெனில கம்பரது இராமாயணமெனனும திவவிய நூல் தமிழ் மொழியில் பலராலும் படித்துப பாராட்டும் வகையில் எளிமையும், இனிமையும் நிறைந்து விளங்குகின்றது. "கல்வியில் பெரியவர் கம்பர்" என்றும், "கம்பன வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்" என்றும் பலராலும் பாராட்டக் காரணம் இவர் பாடிய கம்பராமாயணத்தின் சிறப்பின் காரணத்தினாலேயாகும். கம்பர் தம் காவியததை இயறற வால்மீகி முனிவா இயற்றிய இராமாயணத்தையே முதல் நூலாககொண்டார். வால்மீகி முனிவர் இயற்றிய இராமாயணத்தின் அடிப்படைத் தத்துவத்தை மாற்றாமல் தமிழகத்தின் பணபாடு கலாச்சாரம் ஆகியவற்றுக்கேற்ப ஆங்காங்கே சில மாற்றங்கள் செய்து கம்பர் இராமாயணத்தை இயற்றியுள்ளார். சோழவள நாட்டில் மாயவரத்திற்கு அருகேயுள்ள திருவழுந்தூர் எனனும் ஊரில் கம்பர் பிறந்ததாகக் கூறுவர். இவர் இளம் வயதிலேயே சரஸ்வதி அந்தாதி, ஏர் எழுபது, திருககை வழக்கம் ஆகிய சிறு நூலகளையும் இயற்றியுள்ளார். கம்பர் தான் பாடிய இராமாயணத்தில் கல்வியின சிறப்பைப் பல பாடல்கள் வாயிலாக எடுத்துக் காட்டியுள்ளார். மனிதன் வாழ்க்கையில உயரிய இலட்சியத்துடன் விளங்கவேண்டுமானுல் அவனிடம் கலவி, கேள்வி, ஈகை ஆகிய சிறப்பம்சங்கள் இருக்க வேண்டும். இத்தகைய சிறப்புடைய கல்வி, கேள்வி ஆகியவற்றின் சிறப்பமசங்களைப் பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

கல்வியின் சிறபபு :

ஒருவன் கல்வியைக கற்பதனல் அடையும் நனமையும், கல்லாமையினுல அடையும தீமையையும் ஓர் உவமையின் வாயிலாக அற்புதமாக விளக்குகிறுர் கம்பர். விசுவாமித்திரர் யாகத்தைத் தடைசெய்த தாடகை என்னும் அரக்கியை அம்பெய்து கொல்கிறார் இராமர். இதை விளக்க வநத கம்பர் கல்போன்ற கரிய நிறத்தையுடைய தாடகையின மீது இராமபிரான் எயத அம்பானது அவள மார்பில் தஙகாமல் ஊடுருவி வெளியே சென்றதாகப் பாடியுள்ளார். கல்வியறிவு இல்லாத மூடர்களுககுப் பெரியோர்கள் கூறும அறிவுரை அவன் மனத்தில் தங்கிப் பயன் தராமல் அவ்வறிவுரை வெளியே சென்றுவிடுவதைப் போலவே கல்லாத ஒருவனுடைய மனமும கல்லையொத்தது தான். அதைப் போலவே தாடகையின் உடலும் கல்லைப் போனறு விளங்கியது. இராமபிரானுடைய அம்பும தாடகையின் உடலில் தங்காமல் ஊடுருவி அவள் உயிரை மாய்த்துப் பின் வெளியில சென்றது. நலலோர்களுடைய அறிவுரைகளை மனத்திற்கொணடு நற்பண்புகளைப பெற்று நல்லவனுக வாழ கல்வியறிவு ஒருவனுககு அவசியம் தேவை. இக கருத்தையே இராமாயணத்துள் கம்பர் பாடியிருப்பதாவது :

"கல்லோர்க்கும் நெஞ்சில் தங்காது
அப்புறம் கழன்று; கலலாப்
புல்லோர்க்கு நல்லோர் சொன்னப்
பொருளெனெப் போயிற்று"

இன்னும் கல்வியின் சிறப்பைப் பல இடங்களில் கம்பர் சிறப்பித்துப் பாடியுள்ளார். சூர்ப்பணகையின் வாயிலாகச் சீதையின் அழகைக கேட்டறிந்த இராவணன் உடனே காம உணர்ச்சியால் தன் மனதைச் சீதையினிடம் பறிகொடுத்து மதி மயங்குகிறான. அவனுடைய காம நோய் வளர்வதைக் கம்பர் கல்வியறிவு இல்லாதவன் செய்யும் தீமையானது வளாவதைப் போல இராவணனுக்கும் காம நோய் வளர்ந்து சீதையை அடைய எண்ணங் கொணடதாகப் பாடியுள்ளார்.

" கல்வி நோக்கா மதியிலி மறைந்து
செய்த தீமைபோல் வளர்ந்ததன்றே"

என்று கம்பர் காட்டிய உவமை கல்வி, கேளவி இரணடிலும் குறைந்த அறிவில்லாதவன் செய்யும் செயல் எத்துணை தீமையுடையது என்பதை விளக்குகினறதல்லவா? கல்வி கல்லாதவன் கேள்வியினாலாவது ஓரளவு பொது அறிவைப் பெறமுடியும். அக் கேள்வியறிவும் இல்லாதவன் எல்லாக் காரியங்களிலும தீமையையே நாடுவான். எச்செயலிலும இறுதியில் துனபத்தையே அடைவான் என்பதை இராவணன் வாயிலாக இராமாயணததுள் கம்பர் விளக்கியுள்ளது பாராட்டத்தக்கதாகும்.

புலவர் மு. மணி
வேலூர்.

ஈகையும் கலவியும் :

ஈகையும், கல்வியும ஒவவொருவனுக்கும் எவவளவு அவசியமானது எனபதைக் கூறவந்த கம்பர் முதலில் ஈகை, கல்வி ஆகியவற்றின சிறப்பைக் கூறி விட்டுப் பின்னர் இவை இரண்டும இல்லாமையினால் ஒருவனுக்கு ஏற்படும் தீஙகையும் அழகாக

# ஆகாச கங்கை

திருவேங்கட முடையான் திருமஞ்சன மாட நாள்தோறும் பாப விநாசம் புண்ணிய நதியிலிருந்து அபிஷேகநீர் கொண்டு வரும் அரும் பணியை பெரிய திருமலைநம்பி என்னும் பரமபாகவதர் புரிந்து வநதார்.

ஒரு நாள அவர் வழக்கமபோல் திருமஞ்சனககுடம் சுமந்து திருக் கோயிலுக்குத் திரும்பி வருகையில் வேங்கடவன் ஒரு வேடனாக உருமாறி அவரைப் பின் தொடாந்தான. நேரம பார்த்து நமபியின் தலைமீது இருந்த நீர்குடத்தைக்குறி வைத்து கணை விடுத்தான் கணை துளையிட்ட குடத்திலிருந்து நீா பீறிடடுப பாயந்து பூமியில் ஓடியது. நமபி இதை சிறிதும் உணரவில்லே. பகதி பரவசத்துடன பறநது வந்து கொண்டிருந் தார். அப்போது அவவேடன் நம்பியின்முன வநது நினறான். "பாக வதரே! தாகம் தாள முடியவில்லை பருகுவதற்குச் சிறிது தண்ணீர் தந்து உதவிட வேணடும்" என்றான் அவன. பாகவதர் தலையிலிருந்த தணணீர் குடத்தை தரையில் இறககினாா. குடம காலியாய் இருப்பதைக கண்டு நெஞ்சம் பதறினா. "இத்துணைதூரம வநதுவிட்டேனே, மீணடும் பாப விநாசம் செனறு திரும்புவதற்குள் திருமஞ்சன நேரம் கடந்துவிடுமே." என்று உள்ளம் நொநதார்.

வேடன் பாகவதருககு ஆறுதல் கூற முனைநதான். "பாகவதரே! மனம் பதற வேணடாம. விண்மீது நாண்விசி தண்ணீர் பொழியச் செய் கிறேன். ஆலய திருமஞ்சனத்துக்கு அனுதினமும் இங்குக் கொட்டும் நீரையே கொண்டு செல்லுங்கள்" என்று கூறிவிட்டு வேடன் வில்லே வளைத்தான். பாணம்பறந்தது. ஆகாயத்திலிருந்து நீர் அருவியாய் பூமி யில் இறங்கியது. திருவேங்கடமுடையான் தந்தருளிய கருணை மழையே இது என பெரிய திருமலைநம்பி நெஞ்சம் நெகிழ்ந்தார். அதுவே இன்று ஆகாச கங்கை ஆயிற்று.

ஆகாச கங்கை நீர்தான் இன்றும் ஆலயத்தில் அபிஷேகம் ஆகிறது.

—ஆர். சுபபராவ்-திருக்கோவலூர்

விளக்குகிறார். கல்வியறிவறறவன் மனம் இருண்டு காணப்படுவதோடு அவனிடத்தில் கண்ணோட்டத் தையோ அருட்குணத்தையோ முழு வதுமாகக்காணமுடியாது. கல்வியறி வும, கேள்வியறிவும், ஈகைக்குணமும் கொண்ட ஒருவன் பலருக்கும் பலவித நன்மைகளைச செய்வதைப் போல அயோத்தி நகரத்தில் கல்வியாகிய விதையிலிருந்து முளைத்த மரத்திலி ருந்து பழுத்தக் கனிகள் அனைவருக் கும் பயன்பட்டதாகக் கம்பா பாடி யுள்ளார். அப்பாடலாவது:-

"ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந்து
எண்ணில் கேள்வி
ஆகம் முதறறிண் பணைபோக்கி
அருந்தவத்தின்
சாகம் தழைத்து அன்பு அரும்பித்
தருமம் மலர்ந்து
போகம் கனி ஒன்று பழுத்தது
போலும் அன்றே"

இப்பாடலில் கல்வி, கேள்விகளின் சிறபபை மிக அற்புதமாகப் படம் பிடித்துக் கம்பர் பாடிய திறம் போற் றத்தக்கதல்லவா?

தவமும் கல்வியும :

ஒருவன தன் அரிய முயற்சியின் காரணமாகக்கலவி, கேள்விகளில்சிறப் படையலாம். அத்தகையவன் எந்தக் காரியம செய்தாலும சாதித்து வெற றியும் பெறலாம. கல்வி, கேள்வி களில் சிறநதவன் அரிய பெரிய ஞானத்தையும் அடையலாம். அவன் முற்பிறவியில் செய்த தவப்பயனா லேயேஅந்தஞானத்தை அடைகிறான். அத்தகைய ஞானத்தையும் கல்வியை யும் பெற்றவன் தானும் உயரிய இலட் சியத்தோடு வாழ்வதல்லாமல் பிறருக் கும் தன்னாலான வரையில் உதவியும் செய்கிறான். ஆகவே மனிதன் தன் உயரிய லட்சியத்தை அடைய தவத் தையும், கல்வியையும்கம்பர் இணைத் துப் பாடியுள்ளார். இராமாயணத் துள் இராமபிரானும், சுக்ரீவனும் ஒன்று சேர்நது அமர்ந்திருப்பதைக் கூறவந்த கம்பர் இராமபிரானுக்குத் தத்துவத்தையும, கல்வியையும், சுக் கிரீவனுக்கு முயற்சியையும், ஞானத் தையும் உவமையாகக் கூறிப் பாடிய திறம படிததின் புறத்தக்கது.

கூட்டம் ஒத்திருந்த வீரர் குறித்தது
ஓர பொருட்குமுனனாள்
ஈட்டிய தவமும் பின்னா முயற்சியும்
இயைந்தது ஒத்தார்
மீட்டும வாள் அரக்கர் என்னும்
தீவினை வேரின் வாங்கக்
கேட்டுணர்கலவியோடு ஞானமும
கிடைததது ஒத்தார்"

மேற்காணும் பாடலில் வாழ்க்கையை ஒருவன் நல்ல நெறியில் செலுத்தி வாழ்க்கையில் வெற்றியடைய தவம், முயற்சி, கல்வி,ஞானம ஆகிய எல்லா நற்பண்புகளும் இன்றியமையாதவை எனத் தெள்ளத் தெளிய விளங்கு கின்றதல்லவா?

முடிவுரை :

பரந்த நம் பாரத நாட்டில் இன்று கல்வியறிவைப் புகட்ட கல்விக்கூடங் கள் ஏராளமாக உள்ளன. கல்வியறி வில்லாதவன் இக்காலத்தில் வாழவே இயாலாதென்ற நிலையில உலகம் உள்ளது. கலவியறிவுடையவன் உல கில் எப்பகுதிக்கும் சென்று சிறப் புற்று வாழலாம். "கற்றோர்க்குச் சென்றவிடமெலலாம் சிறப்பு" என்று ஔவையாரும பாடியது நோக்கத் தக்கது. மேலும் கல்விச் செல்வமே எனறும் ஒருவனுக்கு அழியாத சிறநத செல்வமாகும எனறு திருவள்ளுவரும் பாடியுள்ளார். அககுறளாவது :

கேடில் விழுச்செலவம் கல்விஒருவற்கு
மாடல்ல மறறயவை

எனவே என்றும் அழியாத கல்விச் செல்வத்தை முயன்று பெற்று அனை வரும் வாழ்க்கையில் பயனடைவோ மாக.



# ஆழ்வார் அனுபவித்த இராமாவதாரப் பண்புகள்

வைணவ சமயம், அறிவில் பொருள் (அசித்து) அறிவுள பொருள் (சித்து) இறை (ஈசவரன) என முக் கூறுகளைக் கொணடு விளங்குகிறது. இதில் இறை நிலை ஐநதுநிலைகளாக விளங்குகிறது. அவை, இறைவன் பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும நிலை விண்ணாட்டு நிலை (பரதது வம்) எனறும் திருப்பாற்கடலில் எழுநதருளியிருக்கும் நிலை அணி வகுப்பு நிலை (வியூகம்) என்றும, எல்லாப் பொருள்களிலும் அவன் மறைந்து உறையும் நிலை உள்ளுறை நிலை (அநதர்யாமி) என்றும், இராமன், கணணன் முதலான அவதாரங் கள் பிறப்பு நிலை (விபவம்) என்றும், உகந்தருளின திவ்யதேசங்கள்தோறும் எழுந்தருளியிருககும் நிலை வழிபடு நிலை (அர்ச்சை) என்றும் சொல்லப் படுகின்றன. இவற்றில் பிறப்பு நிலை யாவது, நல்வினை தீவினைகளுக்கு ஏறபப் பிறந்தலன்றியே, வினையின நீங்கி விளங்கிய அறிவனாய், உலக உயிர்களை ஆட்கொள்ளும் பொருட் டும் அருளுள்ளம் கொண்டு மணணுல கில் பிறப்பெடுக்கும் நிலையேயாகும. இதனையே அவதாரம் எனபர். அவ தாரங்கள் அனைத்தும இறைவனுக குப் பெருமை தருவதாகையால் விப வங்கள் எனப்படுகின்றன. இவ்விபவ அவதாரங்கள் பல இருப்பினும,

> "தேவுடைய மீனமாயாமையாய் ஏன
> மாய் அரியாய்க்
> குறளாய் மூவுருவிலிராமனாய்க்
> கண்ணனாய்க்
> கற்கியாய் முடிப்பான் கோயில்......"
> (பெரியாழ்வார் திருமொழி—4-9-9)

எனபதற்கு ஏற்ப பத்து அவதாரங் கள் தலை சிறநதன. இந்த அவதா ரஙகள் ஆழ்வார்கள் பாசுரங்களில் பக்திப் பரவசத்தோடு பேசப்படு கின்றன.

ஆழ்வார்கள் பதின்மருள் அவய வியாகப் போற்றப்படுமவரும் ஆழ் வார் எனறு சிறப்புப் பெயர் பெற்ற வருமான நம்மாழ்வார் அருளிய ப்ர பநதங்கள் நான்கு. அவற்றுள் திரு வாய்மொழி தலையாய் விளங்குகிறது.

திருவாய்மொழியில் ஆழ்வார் அநு பவித்த விபவ அவதாரங்களில் இராமாவதாரமும் சிறந்தது. இவ் விபவ அவதாரங்களிலும இறைவன் கல்யாண குணங்களால் நற்பணபு களால் ஒளி மிகுதியுடையவனா கிறான். இக்கல்யாண குணங்கள் அடியார்கள் இறைவனைப் பற்று வதற்கு உதவி செய்யக்கூடியன என் றும், பற்றுவார்க்குக் காரியததைச் செய்யககூடியன என்றும் இருதரத் தன. அதாவது, தாயன்பு (வாத் ஸல்யம்), தலைவனாம் தன்மை (சுவா மித்வம்) நீர்மை (ஸௌசீல்பம்), எளி வந்த தன்மை (ஸௌலப்யம்) விரோதியை அழிக்கும் தன்மை (விரோதி நிவர்த்தகத்வம்), அடி யாரை நழுவவிடாத தனமை (ஆச்ரி தரை நழுவவிடாத ஸ்வபாவம்) முத லானவையாகும். இவையனைத்தும் திருவாய்மொழியில் பேசப்பட்ட விபவ அவதாரங்களில் ஆழ்வார் ஈடு பட்டு அநுபவித்திருப்பினும், திரு மாலுக்கே உரியதாய், விரோதியை அழிக்கும் தன்மை, அடியாரை நழுவ விடாத தன்மை, எளிவந்த தன்மை, அடியாரிடமுள்ள அன்பினால் உதவும் தன்மை முதலான பண்புகள் இராம னுக்கும் பொருந்துதுவதைக் காண லாம். இராமனின் இத்தகைய பணபு நலன்களை எவவெவ்வாறு ஆழ்வார் அநுபவித்தார் என்பது அத்திருவாய் மொழிக்கு அமைந்த உரைகள் உணர்த்தும். இவ்வுரைகளுள் வாதி கேசரி அழகிய மணவாளச்சீயர் அரு ளிய பன்னீராயிரப்படி உரை வாயி லாக இராமாவதாரப் பண்புகளை அநுபவிப்போமாக.

நம்மாழ்வார் உலக மக்களைப் பார்தது இராமனை வணங்கி காலத்தைக் கழிக்கச் சொல்லுகிறார். அந்த இராமனானவன் விரோதிகளை அழிக்கும் தன்மையன்.

டாகடா மா. வரதராஜன,
திருப்பதி.

> "நீள் கடல சூழ் இலங்கைக்கோன
> தோள்கள் தலைதுணி செய்தான்"
> (திருவாய்மொழி—1-6-7)

எனற தொடரால் இராமன் இலங் கையை அழித்த தன்மையைக் கூறு கிறார். அப்படிப்பட்ட இராமனின் திருவடிகளை வணஙகி போது போக்க வேண்டும் எனபதை "தாளகள் தலையில் வணங்கி நாள் கடலைக் கழிமின்" (1-6-7) என்று கூறுவர்.

இராமன் திறத்து வணங்குவது மட்டுமே வழி நின்ற வினைகள் மாள் வித்து என்றும் நிலைத்து இருக்கும் உறுதிப் பொருளைத்தரும் என்பதை

# விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூலமாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில்எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள சரியான சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகபபணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறாதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க் கடிதத்தில் மணியார்டர் எண்,செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொணடால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

— ஆசிரியர்.

"......தொழுமின் அவனைத் தொழுதால்
வழி நின்ற வல்வினை மாள் வித்து அழிவின்றி
யாக்கந்தருமே" (1-6-8)

என்ற தொடர் உணர்த்துகிறது.

விரோதியைப் போக்கும் தன்மையன் இராமன் என்பதை, 'தென்னிலங்கை முற்ற தீயூட்டினான்' (2-1-3) என்பதற்குச் சேரஉரைப்பர்.

இராமனின் கோபக்கனலைக் கூறும் போது, மிக்க உயர்த்தியை யுடைத்தாய் மற்றவர்களை நலியும் வலிமையையுடைய இராவணனின் செல்வம் தீக்கிரையாம்படி அழியச் செய்தான் இராமன். இதனை, 'கிளர்வாழ்வு வேவ இலங்கை செற்றீர்' (2-4-10) என்று உரைப்பர் ஆழ்வார். இராமனின் வீரச் சிறப்பைச் சீயர் 'விரோதி மிக்கால் வெந்து விழப்பண்ணும் வீரப்பாடு' என்று போற்றியுரைப்பா.

விரோதியைப் போக்குவதில் வல்லவன் இராமன் ஒருவனேயல்லாமல் அங்ஙனம் வல்லமை பெற்ற அவன் வில்லின் பெருமையையும் காட்ட 'காயும் கடுஞ்சிலை' (5-4-3) என்று கூறுவர். அதாவது அடியார்களின் விரோதிகளைச் சுட்டுப் பொசுக்குவதில் விரைவையுடைய வில். இதனை ஏந்தியவன் இராமன். இவன் பிறந்த குடியும் பரோபகார சீலமான குடி என்பதை, 'காகுத்தன்' என்ற சொல்லால் உரைப்பர்.

இராமனுடைய வீரப்பண்பைக் காட்டும்போது, 'மாறு இல் போரரக்கன் மதிள் நீறெழச செற்றுகந்த ஏறு சேவகன்' (6-1-10) என்ற பெயரை இராமனுக்குச் சூட்டுகிறார் இவர். அதாவது, இராமன் வேண்டியவர் வேண்டாதவர் என்கிற வேறுபாடில்லாமல் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட வனப்பத்தையுடைய அடியாரிடம் பேரன்பு கொண்டு அவர்கள் விரோதியை அழிக்கும் ஆற்றல் படைத்தவனாய் இருப்பதாகும். 'செற்று உகந்த ஏறு சேவகன்' என்ற இடத்தில் இலங்கையை அழித்து ஏற்பட்ட உகப்புக்குக் காரணமாவது விபீடணனுக்குச் செய் நன்றி செய்தமையை எண்ணியதாகும்.

'பேரெயில் சூழ்............செற்ற பிரான்' (7-3-7) என்ற தொடரால் பிராட்டியான சீதையைப் பெறுவதற்குப் 'பெரியமதிளாலே சூழப்பட்டு அதுக்கு அழகான கடலையுடைத்தாய் கட்டளைப்பட்ட இலங்கையை செறுததழியச் செய்த உபகாரன்' என்று போற்றியுரைப்பர்.

ஸ்ரீதரன் என்ற பெயர்க்காரணத்தைக் கூறும்போது, 'சினை ஏய் தழைய மராமரங்களேழும் எய்தாய் சிரீதரா' (1-5-6) என்கிறபடியே பணைகளோடு சேர்ந்து தழையையுடைய மராமரங்களையும் எய்ததால் வந்த வீரஸ்ரீ தோற்ற ஸ்ரீதரன் என்ற திருநாமம் இராமனுக்கும் பொருந்தியதைக் காட்டுகிருர்.

'மாயவன்' என்ற சொல் கண்ணனுக்கே உரியதாயினும் இராமனுக்கும் பொருத்திக் காட்டுகிறார். அதாவது, மகாராஜாவான சுக்ரீவனுக்கு இராமன் தன் தோள் வலிமையைக காட்டவும், நம்பவைக்கவும் ஏழு மராமரங்களையும் எய்திய வியப்பானவன் என்பதை 'மராமரமெய்த மாயவன்' (1-7-6) என்ற தொடரால் அநுபவிப்பர்.

மற்றொரு இடத்தில் மராமரஙகளைச சொல்லும்போது, அவை தேனையும் பணையையும் உடைத்ததாய் இருந்ததாம். மேலும் சோலையாகத் தழைத்தும் இருநததாம் இதனை 'தேம்பணைய சோலை மராமரமேழெய்ததுவும்' (2-5-7) என்பர். இராமனது வில் வலிமையைச் சொல்லும்போது, 'மராமரம் பைந்தாளேழுருவ ஒரு வாளி கோத்த வில்லா' (2-6-9) என்று உரைப்பர். அதாவது இராமனுடைய வில்லானது ஏழு மராமரங்களினுடைய பருத்த அடி ஏழும் உருவும்படி ஒரு வாளியை முயலாமல் கோததபடி இருநததாம.

மராமரங்களின் இருப்பை 'புணரா நின்ற மரமேழு' என்று உரைப்பர். அதாவது, செவ்வை கண்டு இலக்குக் குறிக்க முடியாதபடி திரளாக அவை நின்றிருந்ததாம். அப்படிப்பட்ட மரங்களை சுக்ரீவனுக்குத் தம்முடைய தோள் பலத்தில் நம்பிக்கை பிறக்க ஒரு வில்லாலே எய்தினான்

இராமன். அதனால் 'அனறு எய்த ஒரு வில்வலவாலோ' (6-10-5) என்று போற்றியுரைப்பர் ஆழ்வார்.

இலங்கையைப் பொடிப் பொடியாக்கினான் இராமன். அதனால அவன் திருமேனியில் மிருதத ஒளி வீசியதாம். இக்காட்சியை 'இலங்கையை நீறே செய்த நெடுஞ்சுடர்ச் சோதி' (2-9-10) என்று அநுபவிக்கிறுர் ஆழ்வார்.

இராமன் எல்லாரும கண்டு அநுபவிக்க அளவற்ற பெருமையையுடைய தோற்றமுடையவன். அவன் ஆழ்வாரால் அநுபவிக்கத்தக்கவனாயும் நிறைவுடையனாயும் காட்சி அளித்ததை 'காண்பெருந்தோற்றத்து எங் காகுத்த நம்பிக்கு' (6-6-9) என்று குறிப்பிடுவர்.

இராமனின் எளி வந்த தன்மையைக் கூறும்போது, 'காகுத்தா' (7-2-3) என்ற சொல்லில் 'ஆடவர்கள் கண்களையும் மனத்தையும் கவருமவனாயும் முனிவர்களும் காட்டில் காணும்படியாயும் இப்படி நாட்டோடு காட்டோடு வாசியறத் தனனைக் காண்பித்தவன்' என்று உரைப்பர்.

ஆழ்வார் இராமனை மனத்தே கண்டு மகிழ்வெய்தியதோடல்லாமல, அவ்வநுபவத்துக்குத் தக்கபடி நேரில் கண்டு கலக்க ஆசைப்படுகிறார். அவர் முன் இருந்த கிளி இராமபிரானது அவயவ அழகை உருக்காட்டவே, கிளியினது சிவந்த வாயை ஒக்கும் வாயையுடையவன என்றும், அத்தோடு ஒககும் கண்ணை யுடையவன் என்றும், அத்தோடு ஒக்கும் கை காலையுடையவன என்றும், பேசும் கிளியினது பசுமையழியாத ச்யாமள நிறம்போலே யிருக்கிற நிறத்தையுடையவன் இராமன் என்றும் அநுபவிக்கிறார் ஆழ்வார். மேலும் அவனைப் பிரிந்தால் தரிக்க முடியாத உயிராயும், அவனன்றி வேறு தஞ்சம் அடையத்தக்கவன் இல்லை என்றும் கூறுவர். இதனை,

'நன் கெண்ணி நான் வளர்த்த சிறு கிளிப்பைதலே
இன்குரலீ மிழற்றேல் எனனாருயிர்க் காகுத்தன
நின் செய்யவாயொக்கும வாயன் கண்ணன் கைகாலினன்
நின பசுஞ்சாம நிறத்தன் கூட்டுண்டு நீங்கினான்''
(9-5-6)

என்ற பாடல் உணர்த்துவது காணலாம்.

'கூனே சிதைய வுண்டை வில் நிறத்தில் தெறித்தாய்'—(1-5-5)

என்ற இடத்தில் இராமன் கூனியின் கூனை வேறொரு அவயவத்துக்குக் குறைவு வராமல் சிதையும்படி உண்டை வில்லின்படியிலே முயற்சியில்லாமல் தெறித்து நிமிர்த்தினான்' என்று கூறுவர்.

அடியார்களை நழுவவிடாத தன்மையன் இராமன். இதனை ஆழ்வார், 'அச்சுதன் தன்னை தயரதற்கு மகன் தன்னை' (3-6-8) என்ற இடத்தில் குறிப்பிடுவது காணலாம். இப்படிப்பட்டவனைத் தஞ்சமடைய வேண்டும் என்பர் ஆழ்வார். இவ்விடத்தில் 'தசரதன் மகன்' என்னாமல் 'தயரதற்கு மகன்' என்று ஆழ்வார் உரைந்ததற்கு அவர் தம் திருவுள்ளம் அறிந்து நம்பிள்ளை என்னும் ஆசார்யர் காரணம் காட்டுகிறார். அதாவது 'ஒரு தடவை வெற்றிலைச் செருக்கிலே ராஜ்யத்தைத் தந்தேன்' என்றுசொல்லாமல்மறுபடியும் கைகேயிக்குப் பரவசப்பட்டவனாய் 'நான் தந்திலேன நீ காடேறப்போ' என்று சொல்லுமபடி தயரதன் விருப்பப்படி நடக்கும் பிள்ளையாயிருந்தான் இராமன் என்று அழகாக உரைப்பர்.

''கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ
புற்பா முதலாப் புல்லெறும்பாதி யொன்றின்றியே
நற்பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நற்பாலுக்குய்த்தனன் நான் முகனார் பெற்ற நாட்டுளே'
(7-5-1)

என்ற பாடலில் ஆழ்வார் இராமபிரானிடம் ஆழங்கால்பட்டு அவனே வீடுபேற்றைக் கொடுக்கும் தன்மையன் என்று அநுபவிக்கிறார். இதில் உறுதிப்பொருளைக் கொடுக்கும் இராமனுடையதனமையைநினைத்து கல்வியில் ஆதரமுடையார்க்கு அவரை ஒழிய வேறு ஒருவர் இல்லை என்று கூறுகிறார.

இராம குணம் நடையாடுகிற நல்ல தேசமான அயோத்தியில் அறிவில் பொருளான முளைத்துப் பரம்பின புல் முதலாகவும், அறிவுள் பொருளான எறும்பு முதலாகவும் உள்ள எல்லாப் பொருள்களையும் நல்ல இடமானபரமபதத்தில் அடையும்படி செய்தவன் இராமன் என்பர். ஆதலால் அனைபையும் நன்மையையுண்டு பண்ணுவதாயுமுள்ள ஒன்றைக் கற்க நினைப்பவர்கள் மிகவும் அன்பனாய் பார்க்கத்தக்க திருமேனியுடையனாய் தர்மம் என்று பொருள் உடைய சக்கரவர்த்தி திருமகனை ஒழிய மற்றொருவர் இல்லை என்று அநுபவிக்கிறார்.

இவ்வாறாக, திருவாய்மொழியில் ஆழ்வார் அநுபவித்த இராமனின் பண்புகளான எளி வந்த தன்மை, அழகு, உதவி செய்யும் தன்மை, விரோதிகளை அழிக்கும் தன்மை ஆகியன சிறந்து விளங்குவதைக் காணலாம்.

''கற்றோர் கருதும் விசயங்களுக்கெல்லாம்
பற்றாம் விபவ குணபபண்புகளை—உற்றுணர்ந்து
மண்ணிலுள்ளோர் தம்பிழவை வாய்ந்துரைத்த மாறன் சொல்
பண்ணிலினிதான தமிழ்ப்பா''
(உபதேசரத்னமாலை—65)

—ஆழ்வார் திருவடிகளே சரணம்—

卐

(12-ஆம் பக்கத் தொடர்ச்சி)

எக்காலத்திற்கும் இன்றளவும் பொருத்தமானதாக அமைநதுள்ள படியால் இராமாயணம் இன்றளவும் சிறப்பாக உளளதற்குக் காரணமா கிறது. மற்றும் பல பட்டிமனறங்களி லும், வழக்காடு மன்றங்களிலும்கூட இந்த இராமாயணமே பெரிதும் கை யாளப்பட்டு வருகிறதும் ஒரு காரண மாகலாம். காவியத் தலைவனான இராமன், காவியத்திலுளள எல்லா தர்மங்களையும் தானே நடததி வாழ்ந்து காட்டி, மனிதனுடைய கடமைகளை தானே நடத்திக காட்டி, மனிதனாக வாழ்ந்து மனிதர்களுக காகவே ஏற்பட்டது இராம காவியம். 142 ஆணடுகளுக்கு முன் வாழ்ந்த, ஸ்ரீதியாகராஜரும் இராமாயணத்தை பாராயணம் செய்தும், இராம கைங் கர்யம செய்தும், இராமநாமத்தையே ஜபித்தும இராமனுடைய திருவடி களை அடைந்தார் என்ற விவரமும் நம் மக்கள் நன்கு அறிநததேயாகும். ஒரு காவியத்தை எழுதும் நூலாசிரி யர்கள், 'நூற்பயனையும எழுது வதுண்டு. இராமாயணத்திறகு வால் மீகி, கம்பன் ஆகிய இருவருமே நூற் பயன் கொடுத்துள்ளனர். வால்மீகி கூறுவதாவது:

"சருத்வா ராமாயணமிதம் தீர்க்க
மாயுச்ச விந்ததி,
ராமஸ்ய விஜயம்சைவ ஸர்வமகிலிஷ்ட
கர்மண:

இராமாயணத்தை படிப்பவர்கள், கேட்பவர்கள் நீண்ட ஆயுள் பெற்று கஷடம் நீங்கி, குடும்பம், தன, தானயம் பெருகுதல், ஸ்தீரிகள் உத்தமான சுகத்தை அடைவார்கள் என்றும் கூறு கிறது. தவிர படிப்போர், கேட் போர், பெற்றோர்கள், மூதாதை யினர் எல்லோரும் வைகுணடத்தை அடைகிறார்கள் என்றும் கூறப்படு கிறது.

"நனமையும் செல்வமும் நாளும்
நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து
தேயுமே
சன்மமும், மரணமும் இன்றித் தீருமே
இமமையே ராம வென்ற இரண்
டெழுத்தினால்

நாடியபொருள் கைகூடும ஞானமும்
புகழுமுண்டாம்,
வீடிய வறியதாகும், வேரியஙகமலை
நோக்கும்,
நீடிய அரக்கர் சேனை நீறுபட்டழிய
வாகை
சூடிய சிலையின ராமன் தோளவலி
கூறுவோர்க்கே.

எனவே மேலே விவரிக்கப்பட்ட பல படிகளாலும் இராமாயணம் இன்றள வும் சிறப்பாக உள்ளது என்று திட்ட வட்டமாகக் கூறமுடிகிறது.



## சுவர்க்கம் வேண்டாம்!

நிறைய புணணியங்கள் செய்த அரசர் ஒருவர் இருந்தார். அவரு டைய காலம் நெருங்கிவிட்டதை அறிந்த எமதர்மன் தன் தூதர்களை அழைத்து "அவரை மிக்க மரியாதையுடன் சுவர்க்கத்துக்கு அழைத்துச் செல்லுங்கள். அவர் அறியாமல் ஒரு சிறு பாவம் செய்துவிட்டார். அதற்குத் தண்டனையாக அவரை நரகத்தின் வழியாக அழைத்துச் செல் லுங்கள். அவர் ஒரு நொடி நரகத்தைப் பார்க்கட்டும், போதும்" என் றான்.

அப்படியே அவர்கள் அவரை நரகத்தின் வழியாக அழைத்துச் செல்லுகையில் நரக வாசிகள் நரகத்தின் வெப்பம் தாளாது கூக்குரலிடு வதையும், இவரைக் கண்டதும் அவர்கள் தங்கள் கூக்குரலை நிறுத்தின தையும் கண்டனர்.

அப்பொழுது அந்த நரக வாசிகள் அரசரைப் பார்த்து. "ஐயா, புண்யாத்துமாவே! தாங்கள் எங்கும் போகாமல் இங்கேயே இருங்கள். உங்கள் பார்வையால் நரகத்தின் வெப்பம் தணிந்துவிட்டது". என்றார் கள்.

அதற்கு அரசர், "என்னால் உங்களுக்கு அனுகூலம உண்டென்றால் எனக்கு சுவர்க்கம் வேண்டாம். நான் இங்கேயே இருக்கிறேன்", எனறு சொல்லி அங்கேயே இருக்க ஆரம்பித்து விட்டார்.

என்ன செய்வதென்று தெரியாமல் எம தூதர்கள் தவித்தார்கள். இதையறிந்து எம தர்மனும் இந்திரனும் அங்கு ஓடி வந்தார்கள். அரசர் அவர்களைப் பார்த்து, "என் புண்ணியத்தை எல்லாம் நான் இந்த நரக வாசிகளுக்குத் தானம் பண்ணுகிறேன். அவர்களை சுவர்க்கத்திற்கு அனுப் புங்கள்" என்று சொன்னார்.

இவர் சொல்லி முடித்ததும்தான தாமதம் நூற்றுக்கணக்கான தெய்வ விமானஙகள் அங்கு வர, நரகவாசிகள் அதில் ஏறி சுவர்க்கம் சென்றனர். ஆனால் அரசர் மாததிரம் நகராமல் அங்கேயே இருநதார்.

"தாங்களும் சுவர்க்கம் வாருங்கள்" எனறான இநதிரன்.

"நான எப்படி சுவர்ககம வர முடியும? நான்தான என் புண்ணி யத்தை எல்லாம் அவர்களுக்குத் தானம செய்துவிட்டேனே?"

"நீங்கள் புண்ணியத்தைத் தானம் செய்தீர்களே, அநதப் பெரும் புண்ணியத்தின் காரணமாக சுவர்க்கம் வருகிறீர்கள்" என்று சொல்லி இந்திரன் அவரை சுவர்க்கத்திற்கு அழைத்துச் சென்றான்.

—'சந்த் வாணி'யிலிருந்து

தொகுத்தவர்: கமலா மாரியப்பன்-கோவை.

# மாறனேர் நம்பி

நாங்குனேரி ஆ. மோகனா,
சென்னை.

மிதுனே ஸார்ப் பபே ஜாதம் யாமு
நார்ய் பதாச்ரிதம்|
உத்தாரகம் யதிந்த்ரஸ்ய மாறனேரி
குரும் பஜே||
யாமுநாசார்ய ஸச் சிஷ்யம் ஸ்ரீ ரங்க
ஸ்தல
வாஸினம்|
ஞான பக்த்யாதி ஸம்பன்னம்
மாறனேரி குரும் பஜே||

*முகவுரை.*

ஜெயங்கொண்ட சோழபுரத்துக்கு மேற்கே கொள்ளிடத்திற்கு வடபால் அமைந்திருந்தது பராந்தகன் என்ற சிற்றூர். இஃது நீர்வளமும் நிலவளமும் மிக்குக் கழனிகளால் சூழப்பட்டிருந்தது. ஆங்கே தென்பாண்டி நாட்டு மாறனேரி என்ற ஊரிலிருந்து சோழ நாட்டில் குடியேறிய திருக்குலக் குடும்பம் ஒன்று வாழ்ந்து வந்தது. நானிலத்தின் தவப்பயனாய் அக்குடும்பத்தில் ஓர் ஆனி மாதம் ஆயில்ய நக்ஷத்திரத்தில் கருவிலே திருவுடைய ஞானக்குழந்தை ஒன்று பிறந்தது. பெற்றோர் அக்குழந்தைக்கு அருமையுடன் இட்ட பெயர் நமக்குத் தெரிந்திலது. குணநலன்கள் முழுதும் கூடிய ஒருவனை நம்பி என்பர். ஆகையினால் குணநலன்களில் சிறந்து விளங்கிய இக்குழந்தையை நம்பி என்றே நாம் அழைப்போம். நம்பி வளர்ந்து, முதிர்ந்து, வேளாண் தொழிலில் ஈடுபடலானார். கருமங்களில் பற்றின்றி யோகியாகவே அவற்றை ஆற்றிவந்தார்.

நம்பியின ஞான வைராகயம் :

ஒரு நாள் நம்பி தமது வயலில் கழனி திருத்திக்கொண்டிருந்தார். நண்பகல் சூரியன் உச்சி ஏறினான். அவர்க்கு பசி மேலிட்டது. ஒரு கை சேறும் தண்ணீருமாக எடுத்து பகவந நிவேதனம் செய்து அதனை யுண்டார். ஆங்கே திருவரங்கத்தை நோக்கி அடியார்கள் புடைசூழ வந்து கொண்டிருந்த பரமாசாரியரான ஸ்ரீ ஆளவந்தார், நம்பியின் இச்செயலைக் கண்டு பெருவியப்புற்று, "உலக நாயகன் உயிர்களின் பசிப்பிணி நீக்க அருமருந்தன்ன உணவு வகை பலவற்றை வெகுவாகப் படைத்திருக்க இவர் இக்கழனிச் சேற்றை அள்ளிப் புசிப்பதேன்? அறிந்து வாருங்கள்" என்று கூறினார். அடியார்களும் நம்பியை நாடியடைந்து இதற்குக் காரணம் என்? என்று வினவ நம்பியும கைகூப்பி வணங்கி, "பெரியீர! இவ்வுடலாகிய மண்ணுக்கு மண் இட்டேன். இம் மண்ணுக்கும் இவ்வுடலுக்கும் வாசியறிந்திலேன்" என்று கூறினார். இது கேட்ட ஸ்ரீ ஆளவந்தார் "கருப்பையிலிருந்து பிறக்கும் பொழுதே ஒருவர்க்கு மயர்வு, மதிகேடுகளைவிளைவிக்கும் சடவாயுவை முனிந்தோட்டிய சடகோபர் ஆகிய மாறனோ இவர்" என்று வியநது மாறனை ஒத்த மதிநலமுடையார் என்று குளிரக் கூறினார். அன்று முதல் நம்பியின் இயற்பெயர் மறைந்து மாறனேர் நம்பி எனபதே உலக வழக்காயிற்று. மாறனேரி எனற ஊரிலிருநது குடியேறிய காரணத்தால் ஊரபெயரடியாக இவர்க்கு இப்பெயர் ஏறபட்டது எனறு கொள்வாருமுளா. எனினும இவருடைய ஞான வைராகயங்கள் பொலிந்து விளங்க ஸ்ரீ ஆளவநதார் அன்புடன் இட்டருளிய திருபபெயரே சிறப்பாம்.

திருவரங்கம் சென்று சேர்தல :

ஆளவந்தார் நம்பியிடம் ஈடுபட்டு அவரைத் தம்முடன் திருவரஙகம் அழைத்துச் செல்ல விருமபினார். அவரை உடன் வருமாறு அழைத்த பொழுது நமபி, "அடியேன் பஞ்சம வருணத்தன். அருகில் வர அடியேனுக்குத் தகுதி இல்லை" என்று கூறி ஒதுங்கியே நின்றார். ஆளவந்தாரும் "பிரும்ம ஞானியாகிய உமக்கும் வருண பேதம் உண்டோ! ஆகையினால் தடையின்றி வருக" என்று கூறி அருகணைந்து அவரையும் உடன் அழைத்துக் கொண்டு திருவரங்கம் சென்று சேர்ந்தார். திருவரங்கத்தின் குடியிருப்புகள் கோயிலுக்கு வெளியிலேயே அமைந்திருந்தன. உள் வீதிகளில் கோயில் (சிப்பந்திகளும்) கைங்கர்யபரர்களும் மற்றும் சிலருமே இருந்தனர். கொள்ளிடக்கரைப் பகுதியில் அந்தணரிருப்பு அதிகமாக அமைந்திருந்தது. ஸ்ரீ ஆளவந்தார் திருவரங்கம் வநது சேர்ந்ததும் தற்பொழுதுள்ள ஸ்ரீ ஆளவந்தார் படித்துறைக்குக் கிழக்கில் ஓர் குடில் அமைத்து அதில் நமபியை இருக்கச் செய்தார். நம்பியும் மண்ணினால் ஸ்ரீ ஆளவந்தாரைப்போல் உருவச் சிலை ஒன்று அமைத்து அத்திருவுருவத்தில் ஸ்ரீ ஆளவந்தாரை தியானித்து வழிபட்டு வந்தார். ஸ்ரீ ஆளவந்தாரும் இவர்க்கு இவர் நினைக்குந்தோறும் பிரத்யக்ஷ ஸேவை தந்தருள்வர் என்பர். இஃது இவரது ஆசார்ய நிஷ்டையின் உயர்நிலைப் பயன் எனினும் தகும்.

புதுக்கிய காலக்ஷேபக் கூடம் :

மேற்குப் புறக் குடியிருபபுப் பகுதியில் ஸ்ரீ ஆளவநதாரது ஆன்மீகப் பேருரையரங்கு ஒன்று அமைந்திருந்தது. ஆங்கே அவர் நிகழ்த்தும் ஆன்மீகப் பேருரைகளை நமபி கூடத்திறகு வெளியே நினறு கேட்டு இன்புறறு வநதார். காலக்ஷேபரர்களின எண்ணிககைப் பெருக பெருக கூடத்தில் இடம் போதாமையால பக்கத்து வீட்டையும் வாங்கிக் கூடத்தைப் பெருக்கிக கட்டி முடித்தனர்.

நல்லதொரு நாளில் புண்யாஹவாசனம் முடித்து புதுமனை புகுந்து பேருரைகளைத் தொடங்க இருநதனர்.

**கால் வண்ணம் இங்குக கணடோம் :**

நம்பியும திருமாலடியார்களை நோக்கி "எம்மையாளும் பரமரீர்! இத்திருமன்றத்திற்கு புண்யாஹவாசனம் நிகழ்த்தி கிருஹப்பிரவேசமும் நடநத பிறகு அடியேன் உள்ளே சென்று இவ்வரங்கினைக் கணடு இன்புறகில்லேன். இப்பொழுது தேவரீர்களது அனுமதி கொண்டு உட்சென்று மன்றினைக் கணடு வணஙகி மீண்டுயவன்" என விண்ணப்பித்து அனுமதி பெற்று உட் சென்று, கண்டு கண்ணீர் சொரிந்து, தண்டனிட்டு மீண்டார். இதையறிந்த ஸ்ரீ ஆளவந்தார் மன மகிழ்ந்து, "கோஷ்டிகாள்! பாகவதரிற் சிறநத நம்முடைய நம்பி எப்பொழுது இக்கூடத்திற்குத் தம் பொன்னடியை சாத்தியருளினரோ அப்பொழுதே கூடம் புனிதமாயிற்று. இன்றே நந்நாள். தனி நன்னாளோ, புனிதமாக்குந் தனிச் சடங்குகளோ வேண்டா. இன்றே தொடங்குவம்", என்று கூறி அடியார்களைக் கூட்டி அருளுரையைத் தொடங்கலானார்.

**அரங்கன் அருள்பாடு :**

பின்பு ஒரு நாள் ஸ்ரீ ஆளவந்தார் பெரிய பெருமாளையும் அழகிய மணவாளனையும் திரு அடி முதல் திருமுடி வரை அனுபவித்து காலாழ, நெஞ்சழியக் கண் சுழல, ரோம கூபமாய் நிற்க பெரிய பெருமாள் இவர்க்குத் திருமாலை திருப்பரியட்டம் தீர்த்தம, ஸ்ரீ சடகோபன் பிரஸாதித்து அர்ச்சகாமீது ஆவேசமாய் அருள்பாடிட்டு" ஆளவந்தாரே! உமககு நாம் மேல் வீடு தந்தோம்" என்றருளிச் செய்து நாளும குறித்தருளினார். ஸ்ரீ ஆளவந்தாரும் "அடியேன் நாயிநதே! நாயிநதே!" எனத தண்டனிட்டு, "அடியேனுக்கு அனுபவிக்க வேண்டிய பிராரப்தம் எஞ்சியுளதே, அவ்வினை தீர வேணடாவோ?" என விண்ணப்பித்தார். உடனே எம்பெருமான் தன் சோதிவாய் திறந்து "யமுனைத்துறைவரே! கவலற்க, நீர் அத்துன்பத்தை உம்முடையடியர்களில் யாரேனும் ஒருவர்க்குக் கொடுத்து அனுபவிக்கச் செயது விட்டு மேல் வீடு எழுந்தருள்க" என்றருளி பிரம்ம ரதம் அளித்து, கோயில் அனைத்துக் கொத்துப்பரிஜனங்கள் புடை சூழ வாத்யங்கள் முழங்கி முன் செல்ல, குடை, சாமரம், சுருட்டி, மகரதோரணம், ஆலவட்டம் முதலிய விருதுகளுடன் வீதிவலம் செய்வித்து மடத்தேறச்செல்ல விட்டருளினார்.

**ஸ்ரீஆளவந்தார் அறிவிப்பு**

ஸ்ரீ ஆளவந்தாரும் கண்ணீரும் கம்பலையுமாய் முசித்து நிற்கும் சிஷ்யர்களைப் பார்த்து "நம்முடைய சரம தசை (இறுதிநாள்) மிகவும் நெருங்கியுள்ளது. நீங்கள் வருந்தவேணடா. ஸ்ரீ ராமாநுசரை சேவிக்கும் பாக்யம் அடியேனுக்கு இல்லை. உங்களுக்கு உளது. ஸ்ரீ ராமாநுசரை அழைத்து வரச் சென்ற பெரியநம்பி அவரை அழைத்துக்கொண்டு திரும்பி வர வேண்டிய தருணமும் அண்மைத்தே. ஆனால் பெருமாள் அதற்கு முன்பாகவே அடியேனைத் திருவடிசேர்த்துக் கொள்ளத் திருவுள்ளம பற்றியுள்ளான். நாமும் இராமாநுசரும் ஒன்று கூடினால் விண்ணாட்டிற்கு இங்கிருநதே ஞானத்தால் படிக்கட்டு கட்டிவிடுவோம். அது அவனுடைய லீலைகுத் தடை ஆம் என நினைதது இங்ஙனே எண்ணினன் போலும்" என்று கூறிச் சிஷ்யர்களைச் தேற்றியருளினார்.

**பிளவைத் துன்பம் ஏற்ற நம்பியின் பெற்றி :**

பிறகு ஆளவந்தார் தம் சிஷ்யர்களைப் பார்த்து. "இந்த எனனுடைய ராஜ ரணமாகிய பிராக்ருதானுபவத்தை உங்களில் யாரேனும் ஒருவர்ககுக் கொடுத்து விட்டு என்னை மேல்வீடு வரும்படி பெருமாள் நியமித்துள்ளார். உங்களில் யார் இநத நோயை ஏற்க முன்வருகிறீர்" என்று கேட்க ஒருவரும் முன் வந்திலர், இவையனைத்தையும் அப்பால் கூப்பிய கையராய் ஒதுங்கி நின்று கேட்டுக்கொணடிருந்த மாறனேர் நம்பி தணடனிட்டு, "அடியேனுக்கு இதை பிரஸாதித்தருள வேண்டும்" என்று கண்ணீர் பெருக்க நின்றார். ஆளவந்தாரும், "நம்பி! இதன வேதனைப் பெருந்துன்பத்தைத் தாங்க வல்லீரோ?" என்னலும் "இது மஹாபிரஸாதம். அடியேனுக்கு இன்பமே தருவது தந்தருள வேணடும்" என்று மீண்டும தண்டனிட்டு எழுந்தார். ஸ்ரீ ஆளவந்தாரும் அவரை அருகே அழைக்க, அவரும் தம் குல மரியாதையை எண்ணி ஒதுங்க 'அந்தக்குலம் உமக்கில்லை' எனக்கூறி அவர்பால் சென்று அவர்க்கு ஸ்ரீ பாததீர்த்தம் பிரஸாதித்து தமதுராஜரணத்தை(Cancer) நோககி, "ஏ! ப்ராரப்தானுபவே! நம்மிடம் இருக்க வேணடிய எஞ்சிய நாட்களை நம்பியிடம் சென்று சேர்ந்து இருக்கக் கடவை" என்று பணித்தார். ராஜரணமும் நம்பியை வந்தடைந்தது. ஸ்ரீ ஆளவந்தார் முதலிகளை நோக்கி திருக்குலத்தவரான நம்பியின் உறுதிப்பாடு, உயர் குடிப்பிறப்புடையரான உங்களில் ஒருவர்க்குமில்லையே" எனக்கூறி அருட்பேருரைகளைத் தொடர்ந்து வழங்கி வந்தார்.

**ஸ்ரீ ஆளவந்தாா மேல்வீடு எயதுதல**

பெருமாள் அருளிய நாளும் வந்தது. ஆளவந்தார் வீடு பெறறாா. அப்பொழுதுதான் வநதடைந்த பெரிய நம்பியும் எம்பெருமானாரும் கொள்ளிடக கரையில் ஸ்ரீ ஆளவந்தாரது சரமவிமலத் திருமேனியைக் கண்டனர். வருதத மிகுதியினால் நிலை இழந்து ஒருவாறு தேறினர். அப்பொழுது ஸ்ரீ இராமாநுசர்செய்த சூளுரைகளும் பிறவும் உலகறியும் அனைத்தையும் வெறுத்துக் காஞ்சி சென்ற ஸ்ரீராமாநுசர் பெரியநம்பியின் முயற்சியால் மீண்டும் திருவரங்கம் எழுநதருளினார்.

பொங்கும் பரிவுடை நம்பியருவர்:

மாறனேர் நம்பியும், தம் ஆசார்யர் ஆளவந்தார் அனுகரஹித்த இராஜரணானுபவத்தை-துன்பத்தை இனபமாக ஏற்று மகிழ்வுடன்துய்த்து வந்தார். நாளாக நாளாக இரணம் முற்றி உடல்நிலை பாதிக்கப்பட்டது. தானாகச் சமைத்துண்ணவும் தன்காரியங்களைத் தானே செய்து கொள்ளவும் இயலாத வகையில்உடல்பாதிப்பு ஏற்பட்டிருந்தது. தம் ஆசார்யரின் அபிமானம் பெற்ற நல்லடியாரான மாறனேர் நம்பியின உள்ளத்திணமையையும், சீர்கேடுற்ற உடல் நிலையையும் கணடு பெரியநம்பி மிகவும் இரங்கி அவர்பால் சென்று அவரது தியாகத்தைக்கண்டு உளம் நெகிழ்ந்து "இதுவன்றோ ஆசார்ய நிஷ்டை. இஙஙனன்றோ சீடனுடைய இருப்பு அமைய வேண்டும்" என்று வியநது அவரை தண்டனிட்டார். மாறனேர் நம்பியும் பதைபதைத்து "ஐயோ நான் கடைநிலை வருணத்தன. நீர் வணங்குதல் தகாது. அடியேனைக் குற்றவாளியாக்காதீர்" எனறு சொல்லி பிரதி வந்தனம் செய்து ஒதுங்கி நினறார். பெரியநம்பியும் "ஸ்வாமி? தேவரீர் "ஸ்பர்ச வேதி" தொட்டதையெல்லாம் தூய்மைப் படுத்தும் பாவனமூர்த்தி. தேவரீரது திருவடிப்பட்டன்றோ திருக்கூடம் பவித்ரமாயிற்று" என்று கூறி அன்று முதல் நாடோறும் இருவேளையும் நம்பியின குடிலுக்கு போனகத்துடன் எழுந்தருளி அவரை நீராட்டி அமுது செய்வித்து வநதனர்.

ஸ்ரீ இராமாநுஜர் அருள் வெள்ளம்:

இஃது இபபடி நாடவாநிற்க ஒரு நாள மாலை முனனிருட்டு வேளையில் தம் அனுட்டானஙகளை முடித்துககொணடு பெரியநம்பி மாறனேர் நமபியின திருக்குழலை நோக்கி போனகத்துடன விரைநது கொண்டிருநதார். இருட்டில் தனி வழிச் செல்லும் பெரியநம்பியைக் கண்டு அவர்க்கு என் வருமோ என்றுபயந்து ஸ்ரீ ராமாநுசரும் அவர்க்குத் திருமேனிக் காவலாக அவரறியாதே பின் தொடர்நதார். நம்பியும குழலுக்குட்சென்று போனக வட்டிலை கீழே வைத்துவிட்டு, முன்னிருந்த திருக்கிணற்றிலிருந்து தீர்த்தம் கொணர்ந்து, அவருக்குத் திருமஞ்சனம் செய்து, திருவடி விளக்கி, திருஒற்று ஆடை ஸமர்ப்பித்து திருமண காப்பு அணிவித்து குருபரம்பரை ஸ்தோத்ர ரத்னம முதலியன அனுஸந்தித்து திருவால வட்டம் பரிமாறிக்கொண்டே, அவருக்கு போனக மூட்டி, பிறகு திருக்கைவிளக்கி திருப் பவளம் சோதிதது அவரை மஞ்சத்தின் மீது கிடத்தியருளினார்.

ராஜ ரணம் மறைந்த விந்தை:

இவையனைத்தையும் வெளியே நின்று கொண்டே ஸ்ரீ ராமாநுசர் உள் நிகழ்ச்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்தார. ஒருபால் இரக்கமே ஓருருவான பெரிய நம்பி. மற்றொருபால் ஆசார்யபக்தியே திரணடு ஒருருவாய்த திகழும் திருக்குலநம்பி. பார்த்துப் பார்த்து நிலை குலைநது நீர்ப்பண்டமாக உருகிப் போனார் இராமாநுசர். மாறனேர் நம்பி இன்பமுடன் படும் துன்பத்தினைக் கணடு "இதுவனறோ ஆசார்யாபிமானம்" எனறு வியந்தார். சாதிவரம்பெலலாம் கடந்த அருள் வெள்ளமோடும் பெரிய நம்பியின் பாகவத நிஷ்டையை நினைத்துப் பூரித்தார். "பரம பாகவதரான மாறனேர் நம்பியை இறைவன இப படிசசோதிப்பதோ? பிணி தீரத்தருள லாகாதோ? இறைவா இது உனக கோர் பெரும்பொருட்டோ"என நம் பெருமாளை ஸ்ரீ ராமாநுசர் மான ஸிகமாகச் சரணம் புக்கார். உடனே ராஜரணம் மறைந்தது. திருமேனி புகர் கொணடு விள஭கிற்று

இரணம் மீணட விநதை:

மாறனேர் நம்பி தம்முடலைப் பார்த்துக் கொண்டார். ராஜரணம இருந்த சுவடு தெரியாதே மறைநது விட்டிருந்தது. 'ஐயோ! எனது ஆசார்யப் பிரஸாதம் எங்கே? எங்கே? யார் இதனைப் பறிததாரோ! நம்பி! நீரே பறிததீரோ? அடியேனுக்குக் கைங்கர்யம் செய்வது போலச்செய்து அடியேனை வஞ்சித்து விட்டீரே? இந்த பஞ்சமனுக்கா இம்மஹா பிரசாதம் எனறு நினைத்தீரோ? பிறர்க் கடிமைப்பட்டு (அனனயசேஷப்பட்டு) அனர்த்தப்பட்டேனோ? ஐயோ! ஐயோ! இனி வாழேன்! இனி வாழேன்! என்று கூறிக் கொணடே அருகிலிருந்த கருங்கல் குழவிஒன்றை எடுத்து தன் தலைமீது மோதிககொள்ள யத்தனிக்க வெளியே நினறிருந்த ஸ்ரீ ராமாநுசர் "ஐயோ! நாம் நல்லதென்று பிரார்த்திக்க அதுவே அனர்த்தமாய் முடிவதோ? வேணடாம், வேண்டாம். பெரிய பெருமாளே, ராஜரணத்தை அவர்க்கு மீணடும் அளித்திடுக" என்று வேண்ட நம் பெருமாள் ஸங்கல்பத்தால் ராஜ ரணம் நம்பியை மீண்டும் வந்தடைந்தது. மூன்றாவது நாள் பிரம்மகபாலம் வெடித்து ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம் என்ற அனுஸந்தானத்துடன நம்பியின் உயிர்ப்பிரிந்தது.

பெரியநம்பியாறறிய புத்திர கிருத்யம்:

பிரும்ம ஞானியான அவரது உடலை நம்பி பிரும்ம மேதத்தாலே ஸமஸகரிததார். இருவரும் ஒரே ஆசாரயரின சிஷ்யர்கள் ஆனபடியால இககைஙகர்யம நம்பிக்கு உரிய தொணடாயிற்று. இங்ஙனமே மற்றைய நாட்சடங்குகளையும் நடத்தினார. பதிமூன்றாம நாள் இயல் இயல் கோஷ்டியையும் பரக்க நடத்தி முடித்தார்.

ஸ்ரீ ராமாநுசா மயர்வு தீர்ந்தது:

ஊரார் "பஞ்சமனுக்கு அநதணன புத்ரக்ருத்யம் செய்வதா?" எனறு வெகுண்டனர். "இவர் செய்வது அதிவாதம், சாத்திரம் மீறிய அக்கிரமசெயல" என்று கூறி நம்பியை சமூக விலக்குச் செய்தனர் மதிநலம் மிக்க ஸ்ரீ ராமாநுசர் கூட

இவர்கள் வாதத்தில் மயங்கி நம்பி பால் சென்று வணங்கி "அடியேன் சமூகத்துப் பொத்தல்களையெல்லாம் ஒரு புறம் அடைத்துக் கொண்டுவரும் பொழுது தேவரீர் வரம்புகளை வெட்டி விடுகிறீரே?" என்று விண்ணப்பித்தார், அதற்கு பெரியநம்பி "இளையாழ்வார் அவதார விசேஷமான தேவரீருக்கு அடியேன் உணர்த்தவோ? மாறனேர் நம்பி பெரியவுடையாரைக் காட்டிலும் (ஜடாயு) தாழ்ந்தவரோ? க்ருத்யம் செய்த அடியேன பெருமாளைக் காட்டிலும பெரியவனோ? விதுரரைக் காட்டிலும் நம்பி தண்ணியரோ? கருத்யம் செய்த தருமபுத்திரனைக் காட்டிலும் அடியேன் பெரியேனோ? பயிலும் சுடரொளி 'நெடுமாற்கடிமை' பதிகங்கள் கடலோசையைப் போலே பொருளற்றனவோ? ஆழ்வார்கள் பரிவுரைகள் பயின்றொழுக வேண்டாவோ" என்று பணிக்க ஸ்ரீ இராமாநுசரும் மயக்கம் தீர்ந்தார். (சடாயு என்ற கழுகரசனுக்கு ராமபிரான் பிரும்ம ஞானிக்குப் போன்று சிறப்பு ஈமச் சடங்குகள் செய்தான் என்பது ராமாயண வரலாறு, கீழ்ச்சாதியினராகக் கருதப்படும் விதுரனுக்கு தருமர் இங்ஙனம் இறுதிச் சடங்குகள் செய்தது என்பது பாரத வரலாறு.)

நம்பியின் மகிழ்ச்சி :

மாறனேர்நம்பிக்குப் போன உயிர் திரும்பியது. மகிழ்ந்தார். பெரிநம்பியின் திருவடிகளில் வீழ்ந்து "க்ஷமித்தருளவேண்டும்! பொறுத்தருளவேண்டும். அவசரப்பட்டு தேவரீரிடம் அபசாரப்பட்டுவிட்டேன்" என பிரார்த்தித்தார. நம்பியும் இறைவன் திருவிளையாடல் இது எனத் தேறி, விடைகொண்டு வெளியேறினார். ஆங்கே குடிலுக்குச் சற்று தூரத்தில் முகக்கோலேந்தி விரைந்து சென்றுகொண்டிருந்த துறவி ஒருவரைக் கண்டார். ஆஜானுபாகு, அதிசுந்தரர், பரம கம்பீரர், மிக வலியர், மஹானுபாவர் த்ரிதண்டஹஸ்தர் தண்ணளியின் தனி உருவரான ஸ்ரீ ராமானுசரே அவர் எனத் தெளிந்தார். உள்ளே வந்து மாறனேர் நம்பியிடம் "ஸ்ரீ ராமாநுசர்க்காகவே நம்பெருமாள் உம்மிடம் இரங்கியருளினார்" என்று விவரங்களையும் கூறிவிட்டு, பெருமாள் இராமாநுசர் இட்ட வழக்காயிருப்பதை எண்ணி இன்புற்றவாறே தம் மனை சென்று சேர்ந்தார்.

திருநாடு காணும் திருக்குல நமபி :

பின்பொருநாள் மாறனேர் நம்பி பெரியநம்பியிடம் "ஸ்வாமி இற்றைக்கு மூன்றாம் நாள நம்முடையா சார்யர் அடியேனுக்குத் திருவடி ஸாதிக்கப் போகிறார். அடியேனுடைய தேஹபந்துக்களிடம் இவ்வுடலை ஒப்பிக்காமல் தேவரீரே எரியூட்டி ஸம்ஸ்கரிக்க வேண்டுகிறேன். கர்மஞானநிஷ்டையோடு கோவிந்தா, கேசவா என்ற அந்திம ஸ்ம்ருதியுடன் எனது ஆன்மா பிரியுமாகில் அடியேனுடைய தேஹத்தைப் பள்ளி படுத்தி ஸம்ஸ்கரித்து திருக்குளத்தில் நீராடி, நீவிர் திருமாளிகைக்கு எழுந்தருள்க. ஆழ்வார்களது பக்தி நிஷ்டை அனுபவம்நிகழ்ந்து ஆன்மா பிரியுமாகில்தேஹத்தைஸம்ஸ்கரித்து சஞ்சயனம் செய்து, கழுத்து வரைக் குளித்துத் திருமாளிகைக்கு எழுந்தருள்க. எவ்வித அன்னித்யானமின்றி ஸ்ரீ ஆளவந்தார் திருவடியே த்யானமாக உயிர்பிரியுமாகில் அடியேனுடைய சரம தேஹத்தை பிரபன்னர் கட்குரிய முறையிலே ஈம விறகடுக்கி, அதன்மீது பள்ளிபடுத்தி ஸம்ஸகரித்து கால் மட்டும் அலம்பிக் கொண்டு திருமாளிகைக்கு எழுந்தருள்க" எனக் கூறினார்.

சாதிச் சழக்கு :

இருப்பினும் உள் வீதியில் குடிவாழ்ந்த பெரிய நம்பியை சாதி அந்தணர் நிந்தித்து ஒதுக்கிவிட்டனர். நம்பியின் உயர்ந்த பக்குவ நிலையை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. கோயிலுக்குச் செல்லவும் தடை செய்தனர். இங்ஙனம் ஒதுக்கப்பட்ட நம்பி தம்மகத்திலேயே ஸ்ரீ ஆளவந்தாரது திருவடிகளைத் தியானித்துக் கொண்டு அமைதியாக இருக்கலானார்.

நம்பெருமாள் போற்றிய நல்லடியார் .

நம்பெருமாளின் உத்ஸவம். திருத்தேர் விழா, ஆடி ஆடி விரைந்து வலம் வந்து கொண்டிருக்கிறது திருத்தேர். இது என்ன ? விரைந்து வந்த திருத்தேர் நின்றுவிட்டதே? நம்பியின் திருமாளிகையின் முன்பல்லவா நிற்கிறது. என்ன முயன்றும் அது நகரவில்லையே! அடியார்கள் "அரங்க நகரப்பா! திருத்தேர் நிலை வந்து சேர அருள செய்யவேண்டும்" எனக் கதறுகிறார்கள். அப்பொழுது பகவான் அர்ச்சகர்மீது ஆவேசமாய் பெரிநம்பியை அருள்பாடிட்டு அழைத்தார். மாலை, தீர்த்தம், ஸ்ரீ சடகோபன் பிரஸாதித்தருளி "மாறனேர் நம்பிக்குப் புத்திரக்ருத்யம் செய்து நம்மை உகப்பித்தீர். போர உகந்தோம் வரிசைகள் பெறுக" எனவும் திருவாய் மலர்ந்தருளினார். தேரும் நகர்த்தது. நிலை வந்து சேர்ந்தது. ஸ்ரீ ராமாநுசரும் போர உகந்தருளினார்.

முடிப்புரை !

திருப்பாணாழ்வார் இறைபக்திக்கு எடுத்துக்காட்டு. 'இழிகுலத்தவரேனும் எம்மடியார்களாகில் தொழுமின் நீர்; கொடுமின்; கொள்மின்;' என்று தன்னை வழிபடுவதுபோல அவர்களையும் வழிபடுமாறு பணித்துள்ளான் அரங்கன் என்ற ஆழ்வார் திருவாக்கை நடைபடுத்திய பெருமை லோக சாரங்க முனிகளுக்கும பெரிய நமபிக்கும் சாரும். ஸ்ரீ ஆளவந்தார் பாகவதாகள் சாதிக கட்டுப்பாட்டு வரம்புககப்பாறபட்டவர் என்பதை அனுட்டான மூலம் வெளியிட்டார். தன்னாரியனுக்கடிமை செய்து உயர்ந்த மாறனேர் நம்பிக்கு நன் மகனாற்றும் ஈமச்சடங்கு செய்து உயர்ந்தார் பெரிய நம்பி.

" நம்பியர் இருவர் நலங்கழல் வாழ்க "



# அஞ்செழுத்துண்மை

திரு. க. இராமலிங்கம்,
புதுப்பேட்டை.

வானாகி, மண்ணாகி, ஒளியாகி, காற்றாகி யெங்கும் கலந்து உயிரோடு உயிரான கயிலைமலையானைப் போற்றும் நாமம் 'நமசிவாய'.

இளையோருக்கு இலக்கியமாக, மூத்தோருக்கு மூதுரையாக, பக்தர்களுக்குப் புராணமாக, தொண்டர்களுக்குத் தேனமுதமாகத் தித்திக்கும் திருவாசகத்தேன் பேரின்பப் பேற்றின் வாயிலுக்குத் திறவுகோல்.

அந்த ஆனந்தத் தேனின் முதல் பாடல் சிவ புராணம். நாம் 'திரு' பெறவே நமக்காகவே மணிவாசகர் திருப்பெருந்துறையில் அருளிச் செய்துள்ளார்.

அந்தச் சிவபுராணத்தில் முதற்கண் கூறும் மங்கல வாழ்த்தாக இறைவனை 'வாழ்க', 'வெல்க', 'போற்றி' என்று குறிப்பிடுகிறார். அதற்கும் முன்பாக ஆரம்பத்திலேயே, மந்திரங்கள் எல்லாவற்றுள்ளும் தலையாயதாகிய 'நமசிவாய' என்ற மிக்க மங்கலச்சொல்லைத்தான் தலைசிறந்த மங்கலச் சொல்லாகக் கருதி ஆரம்பிக்கிறார். எனவே 'நமசிவாய' என்ற மந்திரச் சொல்லைவிட சிறந்த மங்கலச் சொல் வேறு ஏதும் இல்லை என்றாகிறது.

இந்த ஐந்தெழுத்து மந்திரமே தான் நான்மறையாகி, வானவர் நெஞ்சினில நின்று அவர் தம்மை ஆள்கின்றதாம்.

நல்லவர், தீயவர் யாராகிலும் அஞ்செழுத்தை ஓதினால் நம்மைக் கொண்டு போக நமர் வருகையில் அல்லல் கெடுக்குமாம்.

மன்மதன் கையில் மலரம்பு இருக்கிறதே அதில் ஐந்து மலர்கள்தான் இருக்கும். நம் உடம்பில் உள்ள பூதங்கள் ஐந்து-அரியணை துயிலும் பரமன் பாம்பணையில் பள்ளி கொண்டிருக்கும் நாகத்தின் தலையும் ஐந்து-நம்முடைய கையில் விரல்கள் ஐந்து-அஞ்சு அஞ்சு என்று யார் கூறினாலும் அஞ்சாமையை நமக்கு அளிப்பது இந்த ஐஞ்செழுத்துதான்.

தும்மினால் 'அம்மா' என்கிறோம். குழந்தை தும்மினால் 'நூறு' என்கிறார்கள் தாய் மார்கள். நூறாண்டு அக்குழந்தைவாழும் என்று அந்தத் தாயுள்ளம் நினைப்பதில் தவறு ஒன்றும் இல்லை. சிலர் தும்மினால் 'முருகா' என்பார்கள். ஞானசம்பந்தர் சொல்கிறார் 'தும்மினாலும் இருமினாலும் நகரகமே நமக்குக் கிட்டினாலும், இம்மை வினை நம்மைத் தொடரும் போதிலும் 'சிவாய நம' என்ற மந்திரத்தை ஓதினால் 'அம்மா' வைப் போல நமக்கு அது துணையிருக்குமாம். என்னே ஐந்தெழுத்தின் மகிமை!'

மாடு கொடுக்கும்-மாடு (செல்வம்) கொடுக்கும். பிறப்பை அறுத்து 'வீடு' கொடுப்பதும் இந்த ஐந்தெழுத்து மந்திரம்தான. நாதன் நாமம் நமசிவாயம் வேதம் நான்கினுக்கும் மெய்ப் பொருளாய் நிற்பது. அதை நாம் காதலாகி, கசிந்து, கண்ணீர் மல்கி ஓதினால் நமக்கு நன்னெறி கிட்டும் என்பது திண்ணம்.

அதில் நம்பிக்கை நமக்கு வேண்டும். கொலை பாதகராக இருந்தாலும்-தீமைகளையே செய்பவராக இருந்தாலும் 'நமசிவாய' மந்திரத்தைச் சொல்லிவிட்டால் எல்லாத் தீங்கையும் நீக்கிவிடும்-செல்வம் மலகும்-பந்தபாசமறுக்கும். அதனால்தான் நாவுக்கரசர்'கற்றுணைப்பூட்டியோர் கடலிற்பாய்ச்சினும் நற்றுணையாவது நமச்சிவாயவே' என்று நாவினுக்கு அருங்கலத்தைச சொல்கிறார்

இல்லத்தில் இருள் கெடுக்கும் விளக்கு 'நமசிவாய' மந்திரம் என்கிறார் நாவுக்கரசர்.

'சிவபெருமானே உன்னை நான் மறந்துவிட்டாலும்கூட என்னுடைய வாய் மட்டும் 'நமச்சிவாய' என்ற நாமத்தை என்னையறியாமலேயே சொல்லிக் கொணடிருக்கும்' என்கிறார் சுந்தரமூர்த்தி நாயனார். நல்ல நாள், தீயநாள் எனற பாகுபாடு எதுவும் பாாக்க வேணடிய தில்லை-இநத மந்திரத்தைச் சொல்ல-அஞ்சினார்க்கு அரணாகி நிற்பது இம்மந்திரம்.

'நம' என்று சொல்லி பகவானை வணங்குதல் 'முமுக்ஷு'வுக்குத் தலைசிறந்த சாதனம். பகவானை 'நம:' என்று வணங்க வணங்க அவனை ஆசைகளெல்லாம் வநது வணங்கி ஏவல செய்யுமாம்.

வேதங்களில் யஜுர் வேதம் முக்கியமானது அதற்குள் அதன் மத்திய பாகமாகிற நாலாவது காணடம் முக்கியமானது. அதற்குள் மத்திய பாகமான ஐந்தாவது பிரச்னம் முக்கியமானது. அதுதான் ஸ்ரீருத்ரம். அதற்குள் 'நம:' 'சிவாய' என்ற பஞ்சாக்ஷரம் மத்தியிலிருக்கிறது. அதன் மத்தியில் 'சிவ' என்ற இரணடக்ஷரம் அடங்கியிருக்கிறது. இதையே ஜீவரத்னமென்று பெரியோர்கள் சொல்வார்கள்.

வீடு பேறு வேண்டாம். நல்லன வேண்டாம. நான் தினமும் பஸ், ரயில், ஸ்கூட்டர் ஆகியவற்றில் பயணம் செய்தாக வேண்டியது தவிர்க்க முடியாததாகிறது. வழியில் எத்தனை விபத்துக்களைப் பார்க்கிறோம். நமக்கு அநத விபத்து நேராமல் இருக்க வேண்டும் என்ற எணணம் யாருக்குத்தான் வராது. நமக்கு அபாயம் வருவதைத் தவிர்ககை கொடுக்கும மந்திரம்தான் 'சிவாய நம:' இந்த அஞ்செழுததுண்மையை அறிநத ஔவையார்,

''சிவாயநம என்று சிந்தித்திருப்பார்கது
அபாயம ஒருநாளும இல்லை''

என்கிறார். அபாயம் தவிர்க்கும உபாயத்தை உங்களுக்குச் சொல்லி விட்டேன்.

வானததார் போற்றும் மாமருந்து-நானமறை ஏத்தும் பொற்பாதம் கொண்டவன் - பாலுக்குப் பாலகன் வேணடியழுதாலும கூட பாற்கடலையே ஈநதபிரான கழல்களைப் பற்ற ஒரே வழி 'சிவாயநம' மந்திரத்தை துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தும் நெஞ்சக நைநது - நாள் தொறும நினைப்பதுதான் என்று கூறவும் வேணடுமோ?



ஓம ஸ்ரீ மாத்ரே நம :

# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால உருவாககப்படும் பூஜைக்கு உரிய தெயவீக சாதனங்கள்.

| வ.எண். | யநதிரங்களின் பெயருமு அதன் பலனகளும | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) 6½×6½ செ மீ. ரூ. 750/- 5×5 செ. மீ. | 450-00 |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எநதக காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம 8×8செ.மீ. அனைத்து தெய்வஙகளும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயநதிரம 24×24 செ. மீ. 300 ஆணடுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏறபடுததி நிலைத்திருக்கச் செய்யும் (கோல்ட் பிரேம்) | 1150-00 |
| 5. | சாவ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) (மூன்று யநதிரஙகள சேர்த்து) வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும்,எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தைஉணடுபணணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகாஷணம் சாமராஜ்ய லட்சுமி ஸ்ரீ சுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம) மேறகணட பலனை தரவல்லது | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்ந்தது வியாபாரததிலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 9. | ரசமணி ஒனறின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருநது பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 11. | ஸ்ரீ சக்கரம ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனுகாஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 13. | சௌடாம்பிகை மாங்கல்ய பாககிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்கவும் வல்லது. | 70-00 |
| 14. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வந்ததிருமணம் தடையின்றி நடக்கும | 70-00 |
| 15. | ஸ்ரீ சக்கரம லட்சுமி பீஜம் டாலர் அம்பாள் கடாட்சத்தை நிலைத்திருககச் செய்யவல்லது | 70-00 |
| 16. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம) வீட்டிலும் வியாபாரத்திலும வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகள நீககி விபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்ற வலலது | 70-00 |
| 17. | தத்தாதரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும தொல்லைகளை நீக்கிக் காப்பாற்ற வலலது | 150-00 |
| 18. | பூஜைக்கு உரிய பஞ்சாயதன செட்டும், பாணலிங்கம, ஸ்படிக லிங்ககம் பலவிதமான மாலைகள் மாலைகள் சுத்த வெள்ளியால செயயபபடடவையும் இன்னும் பலவிதமான சாதனங்களும் கிடைககும் பூஜைக்குரிய பாதுகை இஙகு கிடைககும. | |

கோவில்களுக்கு வேண்டிய சகல யந்தரங்களும, கிராம தேவதைகளுக்குரிய சகல யந்தரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ. 105/- ஸ்பெஷல்: கோவிலில ஜன ஆகர்ஷணம், தன ஆகாஷணம் செய்யக்கூடிய யந்தரத்தில் விலை ரூ. 300/- வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0-50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விண்ணப்பிக்கவும. மேற்கண்ட யநதிரங்களின் பலனகளை ஓரளவுதான பத்திரிகைகளில் தெரிவிக்க முடியும்.

ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,

153, லாயட்ஸ ரோடு, (ஸடேட் பேங்க் எதிரில்), கோபாலபுரம், சென்னை - 600086.

போன் : கடை ... 472013 மா மேரு டிரஸ்டு வீடு : ... 861254

" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "

# அண்ணல் இருப்பிடம்

திரு. ர வேங்கடரத்தினம்,
நெய்வேலி

இறைவனின் இருப்பிடம் எது?

இந்தக் கேள்விக்கு விடையாவரும் அறிவர் என்கிறீர்களா? கடவுள் தாம் எங்கும் இருக்கிறாரே. அவர்க்கு இருப்பிடம் என்று ஒன்று தனியாக உண்டா? அவர் இல்லாத இடம் கூட உண்டா?

இவ்வாறெல்லாம் நாம் எளிதில் கூறலாம்.

திருமூலர் மட்டும் ஒப்புக் கொள்ள மாட்டார் இந்தப் பேச்சை.

ஈசனின் இருப்பிடம் இன்னது என்பதை எவருமே அறிவதில்லை. என்பது அவர் முடிபு.

அண்ணல் இருப்பிடம் ஆரும் அறிகிலர்
அண்ணல் இருப்பிடம ஆய்ந்து கொள்
வார்களுக்
கண்ணல் அழிவின்றி உள்ளே
அமர்ந்திடும
அண்ணலைக் காணில் அவன்
இவனாகுமே. (766)

திருமந்திரத்தில் 766-வது பாடல் இது. ஐயன் இங்கே இருக்கிறார் என்று எவருமே புரிந்து கொள்வ தில்லை - ஆரும் அறிகிலர். அதை அறிதற்காகத் தீவிரமாக 'ஆய்வு' செய்து கண்டு கொள்வார்கள் உண்டு. இறைவனின் இருப்பிடத்தை, அப் படிக் கொள்வார் விடாமல் ஈசனைப் பற்றி நிற்பர். ஏனெனில் அண்ணல் அழிவின்றி உள்ளே - உள்ளத்தின் உள்ளே-போய் அமர்ந்து விடுவார். அந்த உள் அண்ணலை இவர் தரி சித்துவிடின், அவரும் இவரும் ஒன் றாகி விடுவர். எனவே எம்பெரு மானை ஆய்ந்து கண்டுகொள்ள வேண்டும் என்பது இப்பாடலின் கருத்து.

இவ்வாறு இறைவனைக் கண்டு கொளளநாம்கறகவேணடும். கற்றவர் மற்றவர் என்ற வேறுபாடெல்லாம் வனுக்கு உண்டா? அவர் தாம் எல்லா இறை இடத்தும் உள்ளாரே என்று கேட்கத்தோன்றும். எல்லார்க்கும் பொதுவாக உள்ளவர் அல்லவா இறைவன்?

திருமூலர் இதையே கூறி விளக்கு வார்;

........................... .....
எலலா உயிர்க்கும இறைவனே
ஆயினும
கல்லாதார் நெஞ்சத்துக் காண
வொண்ணாதே (312)

இது ஏன் இப்படி எனக் கேட்கத் தோன்றும்.

இறைவனின தன்மைகளுள் 'மறைத்தல்' என்பது ஒன்று உணடு. ஆம், படைத்தல்-காத்தல்-அழித்தல்-மறைத்தல் - அருளல் என்று ஐந்து தொழில்கள் அவர்க்கு உண்டு. இறை வன் பகட்டாகக் கண்ணில் படுபவர் அல்லர்.

இந்தக் கருத்தை 'மறைத்தல். என்ற தலைப்பில் உள்ள திருமந்தி ரப்பாடல் விளக்கும்.

உள்ளத் தொருவனை உள்ளுறு
சோதியை
உள்ளம விட்ரோரடி நீங்கா ஒருவனை
உளளமும் தானும் உடனே இருக்
கினும்
உள்ளம் அவனை உரு அறியாதே.
(451)

இறைவன் இருப்பது இதயத்தில் தான். செஞ்சுடராக ஒளிரும் பரம் பொருளின் இருப்பிடம் ஒன்றும்

இருள் சூழ்ந்து இல்லை. அப்படியும் ஏன் இதயம் இறைவனைக் கண்டு கொள்வதில்லை. அடுத்தடுத்து உள்ள இதயமும் ஈசனும் எப்படித் தனித் தனித்து நிற்கின்றன? உள்ளம் இறைவனின் உரு அறியாது. ஏன்எனில் அதுதான் 'மறைத்தல்' ஆகும். அதிலிருந்து வெளிவரத்தான் கற்றிருக்க வேண்டும் என்று சொன்னது. ஆய்ந்து கண்டு கொள்ள வேண்டும் ஆண்டவனை என்றது அதனால்தான்!

இந்த இறை ஆய்வுக்கு வழி ஏதேனும் உண்டா?

நாடும் நகரமும் சுற்றித் திரிந்து அண்ணலை எங்கேனும் கண்டு கொள்ள முடியுமா ஊர் ஊராக அலைந்து அவரை எப்படியேனும் பற்றிக் கொள்ள முடியுமோ?

முடியும் என்கிறது திருமந்திர நூல்.

நாடு நகரமும் நற்றிருக் கோயிலும்
தேடித் திரிந்து சிவபெருமான் என்று
பாடுமின் பாடிப் பணியின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க்
கொள்வனே. (1445)

இவ்வடிகளில் திருமூலர் நம்மை க்ஷேத்திராடனம் செய்யச் சொல்கிறார் ஊர் ஊராகச் செல்ல வேண்டும். பெரிய கோயில் நகரங்கள் இருக்கும். சின்னஞ்சிறு சிவாலயங்கள் உள்ள சிற்றூர்கள் உண்டு. ஒன்று விடாமல் சுற்றித் திரிந்து தேடியலைய வேண்டும். அதுதான் 'நாடு - நகரம்' என்றதின் குறிப்பு. எங்கே சிவனார் கோயில் கொண்டிருந்தாலும், அவனைத் தேடிச் சென்றடைய வேண்டும்; பரமேசுவரன் மீது தெய்வீகப் பதிகங்களைப் பாட வேண்டும். பாடிவழிபட வேண்டும். பணிந்த பின், இதயத்தை இறைவனின் பால் செலுத்தி ஒன்றாகி விடவேண்டும்.

இவ்வளவும் செய்தால், கோயிலில் உள்ள சுவாமி நம் நெஞ்சத்துள் குடிபுகுந்து விடுவார்.

சிவாலயங்களைத் தேடிச் சென்று வழிபட வேண்டும். இதுதான் முக்கியம். கோயில்களில் உறையும் ஈசுவரன் இதயத்தில் இல்லையா என்று கேட்டுக் கொண்டு, நாமே அதற்கு ஆம் என விடை கூறிச் சமாதானம் செய்து, வீட்டோடு தங்கி விடலாகாது. இறைவனைத் தேடிச் செல்ல வேண்டும். ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்றது அதனால்தான். நம இதயங்களைக் கோயில்களின் பால் செலுத்த வேண்டும். அண்ணலின் இடம் தேடிச் சென்று பாடிப் பணிந்து ஒன்றி நின்றால், நம் இதயமும் அவரது கோயில் ஆகும். இல்லையேல்?

உள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன்
என்பவர்க்
குள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன்
எம்மிறை
உள்ளத்தும் இல்லை புறத்தில்லை
என்பவர்க்
குள்ளத்தும் இல்லை புறத்தில்லை
தானே (1532)

தெய்வத்தை உள்ளும் புறமும் எங்கும் காண்பவர் ஒரு சாரார். மற்றொரு சாரார் உள்ளோ, புறமோ எங்குமே எம்பெருமானைக் காணாதவர். காணவில்லை எனச் சத்தியமும் செய்வர். அவர்களைப் பற்றிப் பேச்சில்லை இங்கே. இறைவனைக் காணபோம் என்பவர் ஆண்டவனை எங்கும் காண வேண்டும். உள்ளும் புறமும் எதிலும் தெய்வம் தென்பட வேண்டும். தம் இதயத்தில் மட்டும் இறைவன் கோயில் கொண்டுள்ளதாகக் கூறுவோர் எதிராள் இதயத்தில் ஈசுவரனைக் காணவில்லையெனில், நிலைமை விபரீதம் ஆகும். உள்ளும் புறமும் இறைவனைக் காண வேண்டும். சற்றே வேறு விதமாக, இதையேதான் கீதாசாரியன் கூறுவார்-'என்னை எங்கேயும் காண்பானும், என்னில் எதையும் காண்பானும் என்றுமே என்னோடு இருப்பவன் ஆவான். அவனோடு என்றுமே நான் இருப்பேன்' (6-30).



# மதிப்புரை

[நல்வழி காட்டிய ஞான தீபங்கள் ஆசிரியர்: கே. வெங்கடராவ், பக்கங்கள் 6; விலை ரூபா 6 00 பூம்பொழில் பதிப்பகம், 76 குருவப்பச் செட்டித் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2 ]

உலகில் நடைபெறும் நிகழ்ச்சிகள் யாவும் இறைவன் சித்தப்படியேதான் நடைபெறுகின்றன. இன்பமும் துன்பமும் அவரவர் வினைகளுக்கேற்பவே அமைகின்றன. இதனை ஞானமுடையவர் நன்கு உணர்வர். எனவே, ஞானியர் எக்காலத்தும் துன்புறுவதேயில்லை.

ஞானம் ஒளி வடிவானது. அறியாமை இருள் வடிவானது. ஞான ஒளி நம் நல்வாழ்க்கைக்கு வழிகாட்டும். ஞான வள்ளலாகக் கீதாசாரியன் திகழ்கிறான். கண்ணன் காட்டிய வழியில் சென்றால் கவலையே இல்லை. 'கண்ணனே ஞான தீபம்' என்னும் தலைப்பில், சதை நிகழ்ச்சி ஒன்றின் மூலம் கண்ணன் அருளால் தான் நம் வாழ்வின் ஒவ்வொரு செயலும் நடைபெறுகின்றது என்பதைத் தெளிவாக்குகிறார் நூலாசிரியர்.

ஞானியர் எந்த இனத்திலும் தோன்றுவர் என்பதனை 'வேதம் ஓதிய எருமை' என்னும் கட்டுரை நன்கு விளக்குகிறது. இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த நிரம்பிய ஞான தேவர் என்னும் மகானை இறைவனுடன் இரண்டறக் கலந்த காட்சி, 'மனம் மட்டுமல்ல, கல்லையே உருக வைக்கும் காட்சி!' என்னும் தலைப்பில் மாட்சியுடன் விளக்கப்பட்டிருக்கிறது.

கறையே இழந்தாலும் மனம் கனிந்து 'இராமா!' என உச்சரித்தால் மீண்டும் புனிதத் தன்மை பெறலாம் என்பதை 'இராமநாம மகிமை!' என்னும் தலைப்பு நன்கு விளக்குகிறது.

ஞான வெளிச்சமும் அஞ்ஞான இருளும் ஒன்று சேர்ந்து இருக்காது என்னும் உயர்ந்த தத்துவத்தை 'ஆசை நாயகியே ஞான குரு!' என்னும் தலைப்பு அற்புதமாக விவரிக்கிறது.

அகந்தை இருக்கும் வரை ஒருவன் அறியாமை இருளில்தான் உழன்று கொண்டிருப்பான் என்பதைப் பக்கிரி ஒருவனின் செயலை எடுத்துக்காட்டி 'அகந்தைப் பேயை விரட்டுங்கள்!' என்று ஆசிரியர் அறிவு புகட்டுகிறார்.

இவ்வாறு பதினொன்று தலைப்புகளில் ஆசிரியர் பலவேறு ஞான மார்க்கங்களை விளக்குகிறார். எனினும் பொருளடக்கம் இல்லாதது ஒரு குறையாகவே தோன்றுகிறது. நல்வழி நடக்க விரும்புவார்க்கு இந்நூல் ஒப்பற்ற ஞான தீபமாக இருந்து நல்லொளி வீசி வழிகாட்டியாக அமையும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை எனத் துணியலாம்.

—மாருதிதாசன்

Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba Rao, M.A., and Printed at T.T.D. Press, by M. VijayakumarReddy, L.P.T., Manager, T.T.D. Press, Tirupati.

